worse than an unjust act towards friends.

193. Indulgence in useless words at once betrays
one's lack of probity.

194. Uttering empty words before all deprives
one of one's sense of justice and mars one's noble
qualities.

195. If good-natured men speak profitless words,
their greatness and glory will disappear.

196. He is not a man but the chaff among men,
who indulges in vain words.

197. Let great men speak untruth; it is better they refrain from uttering useless words.

198. Men of great discernment will never speak words devoid of great import.

199. Men of unclouded wisdom never utter nonsense even in a forgetful mood.

200. Speak profitable words; avoid nonsense.

## அதிகாரம் 21—தீவினையச்சம்

201. தீவினையார் அஞ்சார்: விழுமியார் அஞ்சுவர்:
தீவினை யென்னுஞ் செருக்கு.

202. தீயவை தீய பயத்தலால் தீயவை
தீயி னும் அஞ்சப் படும்.

203. அறிவினுள் எல்லாந் தலையென்ப தீய
செறுவார்க்கும் செய்யா விடல்.

204. மறந்தும் பிறன்கேடு சூழற்க: சூழின்

அறஞ்சூழும் சூழ்ந்தவன் கேடு.

205. இலனென்று தீயவை செய்யற்க: செய்யின்
இலனாகும் மற்றும் பெயர்த்து.

206. தீப்பால தான்பிறர்கண் செய்யற்க:

நோய்ப்பால

தன்னை அடல்வேண்டா தான்.

207. எனைப்பகை உற்றாரும் உய்வர் : வினைப்பகை
வீயாது பின்சென்(று) அடும்.

208. தீயவை செய்தார் கெடுதல் நிழல்தன்னை
வீயா(து) அடியுறைந் தற்று.

209. தன்னைத்தான் காதலன் ஆயின்
எனைத்தொன்றும்
துன்னற்க தீவினைப் பால்.

210. அருங்கேடன் என்பது அறிக மருங்கோடித்
தீவினை செய்யான் எனின்.



CHAPTER 21—ON FEAR OF EVIL DEEDS

201. Men
hardened in sins do not fear evil; but

the good dread it.

202. Evil is to be dreaded more than fire; for it lands one in disaster.

203. Not to return evil to those who do evil unto you, is, they say, the crown of wisdom.

204. Let none plot evil to others even in forgetfulness. If he does so, the God of Righteousness will compass his ruin.

205. Let none do wrong on account of poverty; if he does so he becomes poorer still.

206. Let not one do evil unto others, if one wants to be free from affliction.

207. You

may escape your enemies but your evil
follows you
and hunts you down relentlessly.

208. Evil dogs you close on

your heels like a
shadow.

209. If one really
harm to others.

loves oneself let one not do any

210. Hardly doth sorrow befall one who does not deviate from right.



*அதிகாரம் 22—ஒப்புரவறிதல்*

211. கைம்மாறு வேண்டா கடப்பாடு மாரிமாட்(டு)

என்றாற்றுங் கொல்லோ உலகு.

212. தாளாற்றித் தந்த பொருளெல்லாம் தக்கார்க்கு
வேளாண்மை செய்தற் பொருட்டு.

213. புத்தே ளுலகத்தும் ஈண்டும் பெறலரிதே
ஒப்புரவின் நல்ல பிற.

214. ஒத்த தறிவான் உயிர்வாழ்வான் ; மற்றையான்
செத்தாருள் வைக்கப் படும்.

215. ஊருணி நீர்நிறைந் தற்றே உலகவாம்
பேர றி வாளன் திரு.

216. பயன்மரம் உள்ளூர்ப் பழுத்தற்றால் செல்வம்
நயனுடை யான்கண் படின்.

217. மருந்தாகித் தப்பா மரத்தற்றால் செல்வம்
பெருந்தகை யான்கண் படின்.

218. இடனில் பருவத்தும் ஒப்புரவிற்(கு) ஒல்கார்
கடனறி காட்சி யவர்.

219. நயனுடையான் நல்கூர்ந்தா னாதல் செயுநீர
செய்யா(து) அமைகலா வாறு.

220. ஒப்புரவி னால்வரும் கேடெனின்
அஃதொருவன்.

CHAPTER 22—ON DECORUM

211. Do not expect any return for the services
(duty) done. What does the world give in exchange
for the clouds that pour rain?

212. All the wealth one earns is for rendering
help to the deserving.

213. Is there anything greater than decorum
either here or in the world to come?

214. Verily he is alive who is in harmony with
the world; others should be ranked with the dead.

215. The wealth of the wise is a never-failing spring.

216. The wealth of the truly liberal is like a tree ripening in the heart of a village.

217. The wealth of the generous is like a healing medicinal tree.

218. Even in poverty the truly discerning never cease to be liberal.

219. The poverty of the liberal of heart is his failure in the offices of tenderness.

220. The poverty that results from a just course of action is worth purchasing by going into the very

bond of slavery.

---



அதிகாரம் 23—ஈகை

221. வறியார்க்(கு)ஒன் றீவதே ஈகை; மற் றெல்லாம்
குறியெதிர்ப்பை நீர துடைத்து.

222. நல்லா றெனினும் கொளல்தீது: மேலுலகம்
இல்லெனினும் ஈதலே நன்று.

223. இலனென்னும் எவ்வம் உரையாமை ஈதல்
குலனுடையான் கண்ணே உள.

224. இன்னா திரக்கப் படுதல் இரந்தவர்
இன்முகங் காணும் அளவு.

225. ஆற்றுவார் ஆற்றல் பசியாற்றல்; அப்பசியை
மாற்றுவார் ஆற்றலிற் பின்.

226. அற்றார் அழிபசி தீர்த்தல் அஃதொருவன்

பெற்றான் பொருள்வைப் புழி.

227. பாத்தூண் மரீஇ யவனைப் பசியென்னும்

தீப்பிணி தீண்டல் அரிது.

228. ஈத்துவக்கும் இன்பம் அறியார்கொல் தாமுடைமை

வைத்திழக்கும் வன்க ணவர்.

229. இரத்தலின் இன்னாது மன்ற நிரப்பிய

தாமே தமியர் உணல்.

230.

சாதலின் இன்னாத தில்லை ; இனிதுஅதூஉம்

ஈதல் இயையாக் கடை.



CHAPTER 23—ON

221. Gift to the poor alone is true charity.
Everything else is of the nature of a barter.

222. Receiving gifts is bad though one is assured
of heaven. Bestowing gifts is good, though thereby
one should be bereft of it.

223. The innately noble never beg but give ere
charity begins.

224. Even to be begged is miserable for we feel
wretched till the beggar's face is lit with joy.

225. Endurance of one's hunger

is the test of
one's penance. Far greater than
that endurance is the
spirit of appeasing the hunger of others.

226. Let the rich appease the
devouring hunger
of the indigent poor. It is a
charity rendered unto
themselves.

227. The pest of hunger never
touches one who
shares one's food with the poor.

228. The callous rich hide
their barren metal;
perhaps they know not the joy of giving.

229. More squalid than begging

indulgence.

is a life of self-

230. Death indeed is the greatest calamity; worse than death is one's failure in charity.



## அதிகாரம் 24—புகழ்

231. ஈதல் இசைபட வாழ்தல் அதுவல்ல(து)
ஊதியம் இல்லை உயிர்க்கு.

232. உரைப்பார் உரைப்பவை யெல்லாம் இரப்பார்க்(கு) ஒன்று
ஈவார்மேல் நிற்கும் புகழ்.

233. ஒன்றா உலகத் துயர்ந்த புகழல்லால்
பொன்றாது நிற்பதொன் றில்.

234. நிலவரை நீள்புகழ் ஆற்றின் புலவரைப்
போற்றாது புத்தேள் உலகு.

235. நத்தம்போல் கேடும் உளதாகும் சாக்காடும்
வித்தகர்க்(கு) அல்லால் அரிது.

236. தோன்றிற் புகழொடு தோன்றுக ; அஃதிலார்
தோன்றலிற் றோன்றாமை நன்று.

237. புகழ்பட வாழாதார் தம்நோவார் ; தம்மை
இகழ்வாரை நோவ தெவன் ?

238. வசையென்ப வையத்தார்க் கெல்லாம் இசையென்னும்
எச்சம் பெறாஅ விடின்.

239. வசையிலா வண்பயன் குன்றும் இசையிலா
யாக்கை பொறுத்த நிலம்.

240. வசையொழிய வாழ்வாரே வாழ்வார் இசையொழிய
வாழ்வாரே வாழா தவர்.

இல்லறவியல் முற்றிற்று



## CHAPTER 24—ON RENOWN

231.

Give and make a name. There is no greater gain to man than such a renown.

232. The one undying theme of praise is the praise of charity.

233. Nothing lasts save one's fearless renown.

234. The wise are not favoured of the gods; but
the renowned on earth are adored by them.

235. Out of death and ruin the wise fashion things
enduring.

236. Let man be born to achieve renown. Let
not the unrenowned see the light of day.

237. Let the inglorious blame themselves. Let them not reproach others.

238. World's reproach befalls one who does not achieve lasting fame.

239. In a land which bears the burden of the unrenowned even nature's bounty is on the wane.

240. The unblemished truly live; the unrenowned merely exist.

END OF THE SECTION ON DOMESTIC LIFE

4

## அதிகாரம் 25—அருளுடைமை

241. அருட்செல்வம் செல்வத்துட் செல்வம் ;
பொருட்செல்வம்
பூரியார் கண்ணும் உள.

242. நல்லாற்றான் நாடி அருளாள்க ; பல்லாற்றால்
தேரினும் அஃதே துணை.

243. அருள்சேர்ந்த நெஞ்சினார்க்(கு) இல்லை
இருள்சேர்ந்த
இன்னா உலகம் புகல்.

244. மன்னுயிர் ஓம்பி அருள்ஆள்வாற் கில்லென்ப
தன்னுயிர் அஞ்சும் வினை.

245. அல்லல் அருளாள்வார்க்(கு) இல்லை
வளிவழங்கும்
மல்லல்மா ஞாலங் கரி.

246. பொருள்நீங்கிப் பொச்சாந்தார் என்பர் அருள்
நீங்கி
அல்லவை செய்தொழுகு வார்.

247. அருளில்லார்க்(கு)அவ்வுலகம் இல்லைப்
பொருளில்லார்க்(கு)
இவ்வுலகம் இல்லாகி யாங்கு.

248. பொருளற்றார் பூப்பர் ஒருகால்; அருளற்றார்
அற்றார்மற் றாதல் அரிது.

249. தெருளாதான் மெய்ப்பொருள்
அருளாதான் செய்யும் அறம்.

கண்டற்றால் தேரின்

250. வலியார்முன் தன்னை நினைக்க : தான்
தன்னின்
மெலியார்மேல் செல்லும் இடத்து.

TURAVARAVIYAL

## CHAPTER 25—ON COMPASSION

241. The crown of wealth is one's compassion; all other wealth is found even among meanest of men.

242. Be compassionate; for compassion is the pivot of all tenets.

243. The compassionate know not hell.

244. Freedom from dread of sin is only for the compassionate that love all creation.

245. The compassionate know not life's agonies: verily the wind-blown earth is witness to it.

246. The cruel that delight in sin perhaps know not what awaits them.

247. Heaven is not for the unfeeling; earth is not
for the indigent.

248. Fortune may smile on the ruined; the un-
feeling are the unredeemed.

249. Behold the unfeeling seeking virtue; it is
like ignorance seeing light.

250. Oppress not the weak; remember your fate
in stronger hands.



*அதிகாரம் 26—புலால் மறுத்தல்*

251. *தன்னூன் பெருக்கற்குத் தான்பிறி தூன்*
*உண்பான்*

எங்ஙனம் ஆளும் அருள்.

252. பொருளாட்சி போற்றாதார்க்(கு) இல்லை; அருளாட்சி
ஆங்கில்லை ஊன்தின் பவர்க்கு.

253. படைகொண்டார் நெஞ்சம்போல் நன்றூக்கா(து) ஒன்றன்
உடல்சுவை உண்டார் மனம்.

254. அருளல்லது யாதெனின் கொல்லாமை கோறல்
பொருளல்லது அவ்வூன் தினல்.

255. உண்ணாமை உள்ளது உயிர்நிலை; ஊன் உண்ண
அண்ணாத்தல் செய்யா(து) அளறு.

256. தினற்பொருட்டால் கொல்லா(து) உலகெனின் யாரும்
விலைப்பொருட்டால் ஊன்தருவார் இல்.

257. உண்ணாமை வேண்டும் புலாஅல் பிறிதொன்றன்
புண்ண(து) உணர்வார்ப் பெறின்.

258. செயிரின் தலைப்பிரிந்த காட்சியார் உண்ணார்
உயிரின் தலைப்பிரிந்த ஊன்.

259. அவிசொரிந்(து) ஆயிரம் வேட்டலின் ஒன்றன்
உயிர்செகுத்(து) உண்ணாமை நன்று.

260. கொல்லான் புலாலை மறுத்தானைக் கைகூப்பி
எல்லா உயிரும் தொழும்.



## CHAPTER 26—ON ABSTAINING FROM MEAT

251. He who fattens on the flesh of animals, can he ever understand the rule of love?

252. Wealth is not for the unwary. is not for the flesh-eater.

253. The heart of a flesh-eater is devoid of love like that of the wielder of a deadly weapon.

254. What is compassion but refraining from killing; what is sin but eating flesh?

255. Will there be throb of life when there is flesh-eating? Will there be any escape from hell for the flesh-eater?

256. Would there be meat for sale, if men were not to kill animals for eating flesh?

257. If one realises that meat is nothing but the wound of another creature, one refrains from eating it.

258. Men of clear vision abstain from the flesh of a slaughtered animal.

259. Far nobler than a thousand oblations on fire is an act of abstinence from flesh.

260. The whole world folds its one who kills not and abjures flesh.

hands in prayer to



அதிகாரம் 27—தவம்

261. உற்றநோய் நோன்றல் உயிர்க்குறுகண் செய்யாமை
அற்றே தவத்திற்(கு) உரு.

262. தவமும் தவமுடையார்க் காகும்; அவம் அதனை அஃதிலார் மேற்கொள் வது.

263. இறந்தார்க்குத் துப்புரவு வேண்டி மறந்தார்கொல்
மற்றை யவர்கள் தவம்.

264. ஒன்னார்த் தெறலும் உவந்தாரை ஆக்கலும்
எண்ணின் தவத்தான் வரும்.

265. வேண்டிய வேண்டியாங் கெய்தலால் செய்தவம்
ஈண்டு முயலப் படும்.

266. தவஞ்செய்வார் தங்கருமம் செய்வார்; மற் றல்லார்
அவஞ்செய்வார் ஆசையுட் பட்டு.

267. சுடச்சுடரும் பொன்போல் ஒளிவிடும்

துன்பம்
சுடச்சுட நோற்கிற் பவர்க்கு.

268. தன்னுயிர் தானறப் பெற்றானை ஏனைய
மன்னுயிர் எல்லாம் தொழும்.

269. கூற்றங் குதித்தலும் கைகூடும் நோற்றலின்
ஆற்றல் தலைப்பட்ட வர்க்கு.

270. இலர்பலர் ஆகிய காரணம் நோற்பார்
சிலர்பலர் நோலா தவர்.



CHAPTER 27—ON PENANCE

261. The true form of penance is to put up with
all pain and to abstain from injury.

262. Penance is possible only for the disciplined.
Disgrace attends the undisciplined.

263. In their ministering to the needs of the ascetic, verily the householders have become oblivious of their penance.

264. Penance, if it wills can mar its foe, or bless its friend.

265. They persevere in penance; for through penance they achieve their desired goal.

266. To do penance is to be alive to one's duty;
those enmeshed in desire come to ruin.

267. Gold shines all the more in fire; those who
do penance become mellowed through suffering.

268. The world worships one who has regained one's soul.

269. Men at the height
triumph over even death.

of their penance can

---



அதிகாரம் 28—கூடா ஒழுக்கம்

271. வஞ்ச மனத்தான் படிற்றொழுக்கம் பூதங்கள்
ஐந்தும் அகத்தே நகும்.

272. வானுயர் தோற்றம் எவன்செய்யும் தன்னெஞ்சம்
தானறி குற்றப் படின்.

273. வலியில் நிலைமையான் வல்லுருவம் பெற்றம்
புலியின்தோல் போர்த்துமேய்ந் தற்று.

274. தவம்மறைந்து அல்லவை செய்தல் புதல்மறைந்து
வேட்டுவன் புள்சிமிழ்த் தற்று.

275. பற்றற்றேம் என்பார் படிற்றொழுக்கம் எற்றெற்றென்(று)
ஏதம் பலவும் தரும்.

276. நெஞ்சில் துறவார் துறந்தார்போல் வஞ்சித்து
வாழ்வாரின் வன்கணார் இல்.

277. புறங்குன்றி கண்டனையர் ஏனும் அகங்குன்றி

மூக்கிற் கரியார் உடைத்து.

278. மனத்தது மாசாக மாண்டார் நீராடி
மறைந்தொழுகு மாந்தர் பலர்.

279.

கணைகொடிது யாழ்கோடு செவ்விதுஆங் கன்ன
வினைபடு பாலால் கொளல்.

280. மழித்தலும் நீட்டலும் வேண்டா உலகம்
பழித்த(து) ஒழித்து விடின்.



CHAPTER 28—ON IMPROPER CONDUCT

271. A man's five senses will laugh within at the
false conduct of a deceitful mind.

272. Of what avail is a man's saintly mien, if his
mind is bent on evil?

273. The ascetic appearance of one who has no strength of will, is like that of an ox grazing in the guise of a tiger.

274. Committing evil under the mask of holiness
is like the hunter lying in wait for birds.

275. The hypocrisy of one who professes asceti-
cism lands one in endless troubles.

276. There is none so hardened in vice as one who
though hollow at heart, wears the mask of saintliness.

277. This world contains (many) men who like
the Kunri seed are fair of face but foul of heart.

278. There are many insincere sacred waters to pass for holy men.

men who frequent

279. The arrow, though straight is deadly; the yāḻ though crooked is sweet. Let people be judged by their actions.

280. If persons abstain from deeds condemned by the world there is no need either for tonsure or for matted locks.



அதிகாரம் 29—கள்ளாமை

281. எள்ளாமை வேண்டுவான் என்பான்
எனைத்தொன்றும்
கள்ளாமை காக்கதன் நெஞ்சு.

282. உள்ளத்தால் உள்ளலும் தீதே பிறன்பொருளைக்
கள்ளத்தால் கள்வேம் எனல்.

283. களவினால் ஆகிய ஆக்கம் அளவிறந்(து)
ஆவது போலக் கெடும்.

284. களவின்கண் கன்றிய காதல் விளைவின்கண்

வீயா விழுமம் தரும்.

285. அருள்கருதி அன்புடையர் ஆதல் பொருள்கருதிப்
பொச்சாப்புப் பார்ப்பார்கண் இல்.

286. அளவின்கண் நின்றுஒழுகல் ஆற்றார் களவின்கண்
கன்றிய காத லவர்.

287. களவென்னும் கார்அறி(வு) ஆண்மை அளவென்னும்
ஆற்றல் புரிந்தார்கண் இல்.

288. அளவறிந்தார் நெஞ்சத்(து) அறம்போல
நிற்கும்
களவறிந்தார் நெஞ்சிற் கரவு.

289. அளவல்ல செய்தாங்கே வீவர் களவல்ல
மற்றைய தேற்று தவர்.

290. கள்வார்க்குத் தள்ளும் உயிர்நிலை
கள்ளார்க்குத்
தள்ளாது புத்தே ளுலகு.



CHAPTER 29—ON NON-STEALING

281. He who wants to command respect must
guard his mind against robbing others.

282.
It is a sin to lust for another's belongings.

283. Ill-gotten wealth however vast comes to

nought.

284. Inordinate desire to steal brings in its train
endless suffering.

285. Can ever grace and love be
found in one who exploits the unwary.

286. Those who have a burning desire to steal
cannot walk in the path of virtue.

287.
The dark thought of stealing is absent in
those who are alive to the value of life.

288.
Virtue dwells in the person of known pro-

bity; deceit dwells in persons addicted to stealing.

289. Those who know nothing else than stealing will indulge in unrighteous acts and forthwith perish.

290. Their very bodies fail the defrauding. The world of the gods fail not the upright.



## அதிகாரம் 30—வாய்மை

291. வாய்மை எனப்படுவது யாதெனின்
யாதொன்றும்
தீமை யிலாத சொலல்.

292. பொய்ம்மையும் வாய்மை இடத்த புரைதீர்ந்த
நன்மை பயக்கும் எனின்.

293. தன்னெஞ்(சு) அறிவது பொய்யற்க;
பொய்த்தபின்
தன்னெஞ்சே தன்னைச் சுடும்.

294. உள்ளத்தால் பொய்யா தொழுகின் உலகத்தார்
உள்ளத்துள் எல்லாம் உளன்.

295. மனத்தொடு வாய்மை மொழியின் தவத்தொடு
தானஞ்செய் வாரின் தலை.

296. பொய்யாமை யன்ன புகழில்லை; எய்யாமை
எல்லா அறமும் தரும்.

297. பொய்யாமை பொய்யாமை ஆற்றின் அறம்பிற
செய்யாமை செய்யாமை நன்று.

298. புறந்தூய்மை நீரான் அமையும்;
அகந்தூய்மை
வாய்மையாற் காணப் படும்.

299. எல்லா விளக்கும் விளக்கல்ல சான்றோர்க்குப்
பொய்யா விளக்கே விளக்கு.

300. யாம்மெய்யாக் கண்டவற்றுள்
வாய்மையின் நல்ல பிற.
இல்லை எனைத்தொன்றும்

## CHAPTER 30—ON TRUTH

291. What is truth but unsullied utterance?

292. Even untruth has the stamp of truth, if it is
free from harm.

293. Let none utter a falsehood against his con-
science lest it should torment him.

294. One sits high in the hearts of all who is true
to oneself.

295. Far greater than a benefactor or an ascetic
is one whose words come from the depths of truth.

296. One's renown is rooted

only in truth; it
leads one easily to every other virtue.

297. Practise truth, you need not practise any
other virtue.

298. Water cleanses the body; truth cleanses the
soul.

299. All lamps are not lamps. To the great the
lamp of truth is the lamp.

300. In all the scriptures we have read, there is
no virtue greater than truth.

## அதிகாரம் 31—வெகுளாமை

301. செல்லிடத்துக் காப்பான் சினங்காப்பான்;
அல்லிடத்துக்
காக்கினென் காவாக்கால் என்.

302.
செல்லா இடத்துச் சினந்தீது; செல்லிடத்தும்
இல்லதனின் தீய பிற.

303. மறத்தல் வெகுளியை யார்மாட்டும் தீய
பிறத்தல் அதனான் வரும்.

304. நகையும் உவகையும் கொல்லுஞ் சினத்தின்
பகையும் உளவோ பிற.

305. தன்னைத்தான் காக்கின் சினங்காக்க;
காவாக்கால்
தன்னையே கொல்லும் சினம்.

306. சினமென்னும் சேர்ந்தாரைக் கொல்லி
இனமென்னும் ஏமப் புணையைச் சுடும்.

307. சினத்தைப் பொருளென்று கொண்டவன்

கேடு

நிலத்தறைந்தான் கைபிழையா தற்று.

308. இணரெரி தோய்வன்ன இன்னா செயினும்
புணரின் வெகுளாமை நன்று.

309. உள்ளிய எல்லாம் உடனெய்தும் உள்ளத்தால்

உள்ளான் வெகுளி எனின்.

310. இறந்தார் இறந்தார் அனையர்; சினத்தைத்
துறந்தார் துறந்தார் துணை.



## CHAPTER 31—ON NOT GETTING ANGRY

301. He who restrains his wrath where it can be
vented shows real restraint. What does it matter
whether one restrains it or not in an

unavailing hour?

302. Anger is bad even where it is unavailing; but where it can be effectively exercised there is no worse evil.

303. Do not get angry with any one; for out of anger springs forth a host of evils.

304. Is there any enemy other than anger that kills both joy and pleasure?

305. If a man were to guard himself let him restrain anger. Otherwise anger gets the better of him.

306. Anger destroys even one's kindred who is the canoe of his life.

307. The
ruin of one who nourishes wrath is as
certain as the injury
to one's hands when beat on the
ground.

308. It is better you show no wrath
even against
one who inflicts on you harm scorching
you like a
thousand-tongued flame.

309. Banish anger
from your mind; you get all
that you long for.

310.
Men given to wrath are one with the devil;
Men

free from it are one with the immortals.



அதிகாரம் 32—இன்னாசெய்யாமை

311. சிறப்பீனுஞ் செல்வம் பெறினும் பிறர்க்கின்னா
செய்யாமை மாசற்றார் கோள்.

312. கறுத்தின்னா செய்தவக் கண்ணும்
மறுத்தின்னா
செய்யாமை மாசற்றார் கோள்.

313. செய்யாமற் செற்றார்க்கும் இன்னாத
செய்தபின்
உய்யா விழுமம் தரும். 314.

இன்னாசெய் தாரை ஒறுத்தல் அவர்நாண
நன்னயஞ் செய்து விடல்.

315. அறிவினான் ஆகுவ துண்டோ பிறிதின்நோய்
தந்நோய்போல் போற்றாக் கடை.

316. இன்னா எனத்தான் உணர்ந்தவை துன்னாமை

வேண்டும் பிறன்கண் செயல்.

317. எனைத்தானும் எஞ்ஞான்றும் யார்க்கும் மனத்தானும்
மாணாச்செய் யாமை தலை.

318.
தன்னுயிர்க் கின்னாமை தானறிவான் என்கொலோ
மன்னுயிர்க் கின்னா செயல்.

319. பிறர்க்கின்னா முற்பகல் செய்யின் தமக்கின்னா
பிற்பகல் தாமே வரும்.

320. நோயெல்லாம் நோய்செய்தார் மேலவாம்; நோய் செய்யார்
நோயின்மை வேண்டு பவர்.



CHAPTER 32—ON NOT DOING EVIL

311. It is the nature of the spotless not to inflict suffering on others, though by it they may get wealth

and renown.

312. It is the nature of the stainless not to resist evil.

313. Even our vengeance for a wanton injury results in our own unbearable sorrow.

314. The noblest revenge is to put the foe to the blush by our acts of kindness.

315. What profiteth one's reason, if one does not feel others' sufferings as his own and guard against them ?

316. Avoid all that causes pain to others.

317. It is the supremest virtue not to commit at any time even slight injury to others.

318. How is it a man inflicts injury upon others knowing how painful it would be to himself?

319. As the night follows day, evil that we do recoils on us.

320. All sufferings befall those who inflict harm on others. Those who desire immunity from suffering never commit injury.



அதிகாரம் 33—கொல்லாமை

321.
அறவினை யாதெனில் கொல்லாமை; கோறல்

பிறவினை யெல்லாம் தரும்.

322. பகுத்துண்டு பல்லுயிர் ஓம்புதல்
தொகுத்தவற்றுள் எல்லாம் தலை.

நூலோர்

323. ஒன்றாக நல்லது கொல்லாமை; மற்றதன்
பின்சாரப் பொய்யாமை நன்று.

324. நல்லா றெனப்படுவ(து) யாதெனின்
யாதொன்றும்
கொல்லாமை சூழும் நெறி.

325. நிலையஞ்சி நீத்தாருள் எல்லாம்
கொலையஞ்சிக்
கொல்லாமை சூழ்வான் தலை.

326. கொல்லாமை மேற்கொண் டொழுகுவான்
வாழ்நாள்மேல்
செல்லா(து) உயிருண் ணுங் கூற்று.

327. தன்னுயிர் நீப்பினும் செய்யற்க தான்பிறி
தின்னுயிர் நீக்கும் வினை.

328. நன்றாகும் ஆக்கம் பெரிதெனினும்
கொன்றாகும் ஆக்கம் கடை.

சான்றோர்க்குக்

329. கொலைவினையர் ஆகிய மாக்கள்
புலைவினையர்
புன்மை தெரிவார் அகத்து.

330. உயிருடம்பின் நீக்கியார் என்பர்
செயிருடம்பின்
செல்லாத்தீ வாழ்க்கை யவர்.

321. If you ask what
is the sum total of virtues, it is non-killing; killing begets sin.

322. All the scriptures
emphasise the virtue of
hospitality and the creed of non-violence.

323. The crown of all virtues is non-violence. Next comes non-lying.

324. The path of rectitude is the path of non-violence.

325. Far greater than an ascetic who renounces the fleeting world is the follower of non-violence.

326. Yama, the Destroyer of life,

never invades the realm where non-violence prevails.

327. Do not commit any act of violence though your life is in peril.

328. The truly great scorn the riches acquired through slaughter.

329. In the eyes of the discerning, men given to slaughter are but churls.

330. Behold the Lazarus, he is guilty of acts of violence in his former birth,

331. நில்லாத வற்றை நிலையின என்றுணரும்
புல்லறி வாண்மை கடை.

332. கூத்தாட்(டு) அவைக்குழாத் தற்றே
பெருஞ்செல்வம்
போக்கும் அதுவிளிந் தற்று.

333. அற்கா இயல்பிற்றுச் செல்வம் ; அதுபெற்றால்
அற்குப ஆங்கே செயல்.

334. நாளென ஒன்றுபோல் காட்டி உயிரீரும்
வாள(து) உணர்வார்ப் பெறின்.

335. நாச்செற்று விக்குள்மேல் வாராமுன் நல்வினை
மேற்சென்று செய்யப் படும்.

336. 'நெருநல் உளன்ஒருவன் இன்றில்லை'
என்னும்
பெருமை உடைத்திவ் வுலகு.

337. ஒருபொழுதும் வாழ்வ தறியார் ; கருதுப

கோடியும் அல்ல பல.

338. குடம்பை தனித்தொழியப் புள்பறந் தற்றே
உடம்போ(டு) உயிரிடை நட்பு.

339. உறங்குவது போலும் சாக்காடு; உறங்கி
விழிப்பது போலும் பிறப்பு.

340. புக்கில் அமைந்தின்று கொல்லோ
துச்சில் இருந்த உயிர்க்கு.

உடம்பினுள்

TURAVARAVIYAL

69

## CHAPTER 34—INSTABILITY

331. It is contemptible folly to

mistake the unstable for the stable.

332. The flow of fortune is like the gathering of a crowd at a concert; its ebb is like the melting of the crowd at its close.

333. Fortune is fickle; if you come by it delay not; put it to proper use.

334. Time seems all laughter; but to the discerning it is a saw sawing away the life of men.

335. Before hiccough arises and before the tongue is paralysed do good that leads to salvation.

336. Yesterday he was, but to-day he is not; this is the glory of the earth.

337. One is not sure what awaits him the next moment; but he becomes a prey to a thousand and one

thoughts.

338. The attachment of life to the body is like that of a full-fledged bird flying from its broken shell.

339. Death is like sleep, birth is that awakening from sleep.

340. Why should the soul seek a temporary shelter in the perishable body? Is there not a durable habitation for it?



அதிகாரம் 35—துறவு

341. யாதனின் யாதனின் நீங்கியான் நோதல்
அதனின் அதனின் இலன்.

342. வேண்டின்உண் டாகத் துறக்க; துறந்தபின்

ஈண்டியற் பால பல.

343. அடல்வேண்டும் ஐந்தன் புலத்தை; விடல்வேண்டும்
வேண்டிய வெல்லாம் ஒருங்கு.

344. இயல்பாகும் நோன்பிற்(கு) ஒன் றின்மை; உடைமை
மயலாகும் மற்றும் பெயர்த்து.

345. மற்றும் தொடர்ப்பா(டு) எவன்கொல்? பிறப்பறுக்கல்
உற்றார்க்(கு) உடம்பும் மிகை.

346. யான் எனதென்னுஞ் செருக்கறுப்பான் வானோர்க்கு
உயர்ந்த உலகம் புகும்.

347. பற்றி விடாஅ இடும்பைகள் பற்றினைப்

பற்றி விடாஅ தவர்க்கு.

348. தலைப்பட்டார் தீரத் துறந்தார்; மயங்கி
வலைப்பட்டார் மற்றை யவர்.

349. பற்றற்ற கண்ணே பிறப்பறுக்கும்; மற்று
நிலையாமை காணப் படும்.

350. பற்றுக பற்றற்றான் பற்றினை; அப்பற்றைப்
பற்றுக பற்று விடற்கு.



## CHAPTER 35—RENUNCIATION

341. A man does not suffer pain from whatever things he has renounced.

342. There is endless joy in early renunciation.

343. Subdue your senses and give up all your longings.

344. Renunciation is the mark of asceticism. Any clinging leads to one's delusion.

345. Why talk of other attachments; even our body is a hindrance.

346. He enters the abode of the gods who lays the axe at 'I' and 'mine.'

347 Sufferings seize men of desire.

348. Salvation is for one of renunciation; others get entangled in endless births and deaths.

349. Cut off all attachments; you cut off the

tangle of life; otherwise you are caught.

350. Cling fast to Him who is free from all desire. Seek Him for your freedom from attachment.



அதிகாரம் 36—மெய்யுணர்தல்

351. பொருளல்ல வற்றை பொருளென் றுணரும்
மருளானாம் மாணாப் பிறப்பு.

352. இருள்நீங்கி இன்பம் பயக்கும் மருள்நீங்கி
மாசறு காட்சி யவர்க்கு.

353. ஐயத்தின் நீங்கித் தெளிந்தார்க்கு வையத்தின்
வானம் நணிய(து) உடைத்து.

354. ஐயுணர்வு எய்தியக் கண்ணும் பயமின்றே
மெய்யுணர்வு இல்லா தவர்க்கு.

355.

எப்பொருள் எத்தன்மைத் தாயினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு.

356. கற்றீண்டு மெய்ப்பொருள் கண்டார்
மற்றீண்டு வாரா நெறி.

தலைப்படுவர்

357. ஓர்த்துள்ளம் உள்ளது உணரின், ஒருதலையாப்
பேர்த்துள்ள வேண்டா பிறப்பு.

358. பிறப்பென்னும் பேதைமை நீங்கச்,
செம்பொருள் காண்ப தறிவு.

சிறப்பென்னும்

359. சார்புணர்ந்து சார்பு கெடஒழுகின், மற்றழித்துச்
சார்தரா சார்தரும் நோய்.

360. காமம் வெகுளி மயக்கம் இவை மூன்றன்
நாமம் கெடக்கெடும் நோய்.

TURAVARAVIYAL

## 73 CHAPTER 36—TRUE KNOWLEDGE

351. Out of ignorance which mistakes things unreal for things real springs the wretched cycle of births.

352. Men of pure vision are led from darkness to light.

353. To men of unclouded wisdom heaven is nearer than earth.

354. What profits one's perfect senses if one is not endowed with true knowledge.

355. To track all things to their

subtlest retreats is true knowledge.

356. Those who have learnt the truth never enter back this world.

357. There is no fear of one's re-birth if one seeks and finds the truth.

358. Seek the truth to remove delusion; that is wisdom.

359. Seek the truth on which everything rests; you will be free from all the ills that assail life.

360. Wipe out the very names of lust, anger and delusion; you will

be wiping out the cause of re-birth.



அதிகாரம் 37—அவா அறுத்தல்

361. அவாவென்ப எல்லா உயிர்க்குமெஞ் ஞான்றும்
தவாஅப் பிறப்பீனும் வித்து.

362. வேண்டுங்கால் வேண்டும் பிறவாமை; மற்றது
வேண்டாமை வேண்ட வரும்.

363. வேண்டாமை யன்ன விழுச்செல்வம் ஈண்டில்லை;
யாண்டும் அஃதொப்ப தில்.

364. தூஉய்மை என்ப(து) அவாஇன்மை;

மற்றது
வாஅய்மை வேண்ட வரும்.

365. அற்றவர் என்பார் அவாஅற்றார்; மற்றையார்
அற்றாக அற்ற திலர்.

366. அஞ்சுவ தோரும் அறனே; ஒருவனை
வஞ்சிப்ப தோரும் அவா.

367. அவாவினை ஆற்ற அறுப்பின், தவாவினை
தான்வேண்டும் ஆற்றான் வரும்.

368. அவா இல்லார்க்(கு) இல்லாகும் துன்பம்; அஃதுண்டேல்
தவாஅது மேன்மேல் வரும்.

369. இன்பம் இடையறா தீண்டும் அவாவென்னும்
துன்பத்துள் துன்பங் கெடின்.

370. ஆரா இயற்கை அவாநீப்பின், அந்நிலையே

## CHAPTER 37—THE DESTRUCTION OF DESIRE

361. The learned say desire is the eternal seed of life.

362. Do you long for anything? Long for not being born again; this you can achieve if you cease your desires.

363. There is no greater possession than freedom from desire either here or in the world beyond.

364. What is purity of mind but absence of desire?
It will follow if one burns for truth.

365. Only those who have renounced are free;
others are not.

366. It is desire that seduces men into sin; Asceticism dreads desires.

367. The desired path of virtue is open to one who kills desire.

368. There is no sorrow for those who are free
from desire. Endless sorrows befall men with desire.

369. There is an eternal flow of life's happiness
when desire, the evil of all evils, dies out.

370. Give up your insatiable longings; you will be conferring on yourself an eternal life.



## அதிகாரம் 38—ஊழ்

371. ஆகூழால் தோன்றும் அசைவின்மை கைப்பொருள்
போகூழால் தோன்றும் மடி.

372. பேதைப் படுக்கும் இழவூழ்; அறிவகற்றும்
ஆகலூழ் உற்றக் கடை.

373. நுண்ணிய நூல்பல கற்பினும், மற்றும்தன்
உண்மை அறிவே மிகும்.

374. இருவே(று) உலகத் தியற்கை; திருவேறு;
தெள்ளியர் ஆதலும் வேறு.

375. நல்லவை எல்லாஅும் தீயவாம் ; தீயவும்
நல்லவாம் செல்வஞ் செயற்கு.

376. பரியினும் ஆகாவாம் பாலல்ல ; உய்த்துச்
சொரியினும் போகா தம.

377. வகுத்தான் வகுத்த வகையல்லால் கோடி
தொகுத்தார்க்கும் துய்த்தல் அரிது.

378. துறப்பார்மன் துப்புர வில்லார் உறற்பால
ஊட்டா கழியும் எனின்.

379. நன்றாங்கால் நல்லவாக் காண்பவர்
அன்றாங்கால்
அல்லற் படுவ தெவன் ?

380. ஊழிற் பெருவலி யாவுள ? மற்றொன்று
சூழினும் தான்முந் துறும்.

அறத்துப்பால் முற்றிற்று

TURAVARAVIYAL

77

## CHAPTER 38—FATE

371. Out of fate springs perseverence which leads to one's fortune. Out of fate springs one's indolence which leads to one's ruin.

372. Fate makes fools of the wise. Fate makes folly pass for wisdom.

373. What if one is a man of subtle learning? One's mind is swayed by fate.

374. Fate has a double sway. It makes the foolish rich and the wise poor.

375. Things favourable become adverse, and the unfavourable favourable.

376. One may lose one's wealth however care-
fully one may guard it. One may not lose it though
he flings it away. It is all ordained by fate.

377. Unless pre-ordained by the divine Disposer,
even if a man did pile up a crore it would not be
possible for him to enjoy it.

378. The poor could easily renounce the world if
fate were to refrain from visiting them with the curse of
their past deeds.

379. Why worry about pain and pleasure? They

are all the workings of fate.

380. What is there so potent as Fate? Even if we devise some way of counteracting it, it takes us by surprise.

END OF ARATTUPPĀL

# பொருட் பால்



## அதிகாரம் 39—இறைமாட்சி

381. படைகுடி கூழ்அமைச்சு நட்பரண் ஆறும்
உடையான் அரசருள் ஏறு.

382. அஞ்சாமை ஈகை அறிவூக்கம் இந்நான்கும்
எஞ்சாமை வேந்தற்(கு) இயல்பு.

383. தூங்காமை கல்வி துணிவுடைமை இம்மூன்றும்
நீங்கா நிலனாள் பவற்கு.

384. அறனிழுக்கா(து) அல்லவை நீக்கி மறனிழுக்கா
மானம் உடைய(து) அரசு.

385. இயற்றலும் ஈட்டலும் காத்தலும் காத்த
வகுத்தலும் வல்ல தரசு.

386.
காட்சிக் கெளியன் கடுஞ்சொல்லன் அல்லனேல்
மீக்கூறும் மன்னன் நிலம்.

387. இன்சொலால் ஈத்தளிக்க வல்லார்க்குத் தன்சொலால்
தான்கண்ட அனைத்(து) இவ் வுலகு.

388. முறைசெய்து காப்பாற்றும் மன்னவன் மக்கட்கு
இறையென்று வைக்கப் படும்.

389. செவி கைப்பச் சொற்பொறுக்கும் பண்புடை வேந்தன்

கவிகைக் கீழ்த் தங்கும் உலகு.

390. கொடைஅளி செங்கோல் குடியோம்பல் நான்கும்

உடையானாம் வேந்தர்க்(கு) ஒளி.



## SECTION I. THE STATE

## CHAPTER 39—ON MAJESTY

381. He is a lion among kings, who possesses with an army, a territory, wealth, ministers, allies and a fortress.

382. Fearlessness, liberality, wisdom and energy are the unfailing marks of a King.

383. The ruler of the earth must never be bereft of his sleepless watchfulness,

learning and courage.

384. He is an honourable King who swerves not from virtue and abstains from vice.

385. He is the King who is capable of acquiring, preserving and wisely distributing wealth.

386. The world will extol the kingdom of one who is easy of access and who does not indulge in harsh words.

387. He who is not harsh of tongue but full of grace and liberality commands the homage of the world.

388. He is a God among men who shields his subjects.

389. The world is under the sway of the monarch

who puts up with bitter counsel.

390. He is
a light among Kings who is endowed
with liberality, grace, love for his subjects,
and a desire for just rule.





அதிகாரம் 40—கல்வி

391. கற்க கசடறக் கற்பவை ; கற்றபின்
நிற்க அதற்குத் தக.

392. எண்ணென்ப ஏனை எழுத்தென்ப இவ்விரண்டும்
கண்ணென்ப வாழும் உயிர்க்கு.

393. கண்ணுடையர் என்பவர் கற்றோர் ; முகத்திரண்டு
புண்ணுடையர் கல்லா தவர்.

394. உவப்பத் தலைக்கூடி உள்ளப் பிரிதல்

அனைத்தே புலவர் தொழில்.

395. உடையார்முன் இல்லார்போல் ஏக்கற்றும் கற்றார்;
கடையரே கல்லா தவர்.

396. தொட்டனைத்து ஊறும் மணற்கேணி; மாந்தர்க்குக்
கற்றனைத் தூறும் அறிவு.

397. யாதானும் நாடாமால் ஊராமால் என்னொருவன்
சாந்துணையும் கல்லாத வாறு.

398. ஒருமைக்கண் தான்கற்ற கல்வி ஒருவற்கு
எழுமையும் ஏமாப்பு உடைத்து.

399. தாம்இன் புறுவ(து) உல(கு)இன் புறக்கண்டு
காமுறுவர் கற்றறிந் தார்.

400. கேடில் விழுச்செல்வம் கல்வி ஒருவற்கு
மா(டு)அல்ல மற்றை யவை.

## CHAPTER 40—ON LEARNING

391. Faultlessly pursue knowledge and abide by it.

392. Verily the numbers and letters are the eyes of the living one.

393. The learned alone are said to possess eyes; but they are only sores in the face of the unlettered.

394. The duty of the learned is to delight man by their company. Hunger ever more for it even while parting.

395. Eager like the beggars at the door of the wealthy is the sufferer of knowledge; the illiterate are held in scorn.

396. The deeper you delve into the earth, the greater will be the flow of

water. Likewise knowledge is in proportion to your learning.

397. No country and no place is alien to the learned. How is it that persons remain in ignorance to the end of their lives?

398. The knowledge that a person gains in one birth stands him in good stead for seven births.

399. The learned thirst for knowledge more and more, because what gives them pleasure, delights the world.

400. The precious undecaying wealth of a man is his learning. All other riches are no wealth at all.

## அதிகாரம் 41—கல்லாமை

401. அரங்கின்றி வட்டாடி யற்றே நிரம்பிய
நூலின்றிக் கோட்டி கொளல்.

402. கல்லாதான் சொற்கா முறுதல் முலையிரண்டும்
இல்லாதாள் பெண்காமுற் றற்று.

403. கல்லா தவரும் நனிநல்லர் கற்றார்முன்
சொல்லா திருக்கப் பெறின்.

404. கல்லாதான் ஒட்பம் கழியநன் றாயினும்
கொள்ளார் அறிவுடை யார்.

405. கல்லா ஒருவன் தகைமை தலைப்பெய்து
சொல்லாடச் சோர்வு படும்.

406. உளரென்னும் மாத்திரையர் அல்லால் பயவாக்
களரனையர் கல்லா தவர்.

407. நுண்மாண் நுழைபுலம் இல்லான் எழில்நலம்
மண்மாண் புனைபாவை யற்று.

408. கல்லார்கண் பட்ட வறுமையின் இன்னாதே
கல்லார்கண் பட்ட திரு.

409. மேற்பிறந்தார் ஆயினும் கல்லாதார்
கற்றார் அனைத்திலர் பாடு.
கீழ்ப்பிறந்தும்

410. விலங்கொடு மக்கள் அனையர் இலங்குநூல்
கற்றாரோடு ஏனை யவர்.



## CHAPTER 41—ON NON-LEARNING

401. Entering an assembly without sufficient knowledge is like playing at a dice board without its knowledge.

402. The desire of the ignorant to speak is like the desire of a woman without breasts claiming woman- hood.

403. Blessed are the ignorant if they venture not to address the assembly of the learned.

404. The learned value not the intelligence of the illiterate.

405. The pretensions of the illiterate disappear the moment they launch upon a discussion with the learned.

406. The ignorant just exist; they are like a piece of barren land.

407. The imposing position of one who lacks penetrating intellect reminds us of the

external glitter
of clay.

408. Far sweeter is the poverty of the learned
than the riches of the ignorant.

409. The highborn ignorant sink low in the scale
while the learned even of humble birth are exalted.

410. The ignorant are but beasts by the side of
men of wide learning.



அதிகாரம் 42—கேள்வி

411. செல்வத்துள் செல்வம் செவிச்செல்வம் அச்செல்வம்

செல்வத்துள் எல்லாம் தலை.

412. செவிக்குண(வு) இல்லாத போழ்து சிறிது
வயிற்றுக்கும் ஈயப் படும்.

413.
செவியுணவின் கேள்வி யுடையார் அவியுணவின்
ஆன்றாரோ(டு) ஒப்பர் நிலத்து.

414.
கற்றிலன் ஆயினும் கேட்க; அஃதொருவற்(கு)
ஒற்கத்தின் ஊற்றாம் துணை.

415. இழுக்கல் உடையுழி ஊற்றுக்கோல் அற்றே
ஒழுக்கம் உடையார்வாய்ச் சொல்.

416. எனைத்தானும் நல்லவை கேட்க;
அனைத்தானும்
ஆன்ற பெருமை தரும்.

417. பிழைத்துணர்ந்தும் பேதைமை சொல்லார் இழைத்
ஈண்டிய கேள்வி யவர். [துணர்ந்து

418. கேட்பினும் கேளாத் தகையவே
கேள்வியால்
தோட்கப் படாத செவி.

419. நுணங்கிய கேள்வியர் அல்லார் வணங்கிய
வாயினர் ஆதல் அரிது.

420. செவியின் சுவைஉணரா வாய்உணர்வின்
மாக்கள்
அவியினும் வாழினும் என்.



## CHAPTER 42—ON HEARING

411. The wealth of all wealth is the wealth of hearing. It outtops all other wealth.

412. Men think a little of the stomach only when the ear is not fed.

413. Those mortals who feast their ears with learning are one with the immortals with their sacri- ficial offerings.

414. Though devoid of learning let one fill one's ear with knowledge.. It is his prop in his hour of gloom.

415. The counsel of the upright is like a staff
over a slippery ground.

416. Listen to wholesome counsel however meagre; for out of it springs great good.

417. Men of
searching understanding do not speak foolishly even in a thoughtless mood.

418. The ear that is not filled with understanding is really deaf.

419. Men that lack subtle understanding lack modesty in speech.

420. What avails it whether men live or die, if they merely satisfy the palate and not feed the ear with wisdom.



அதிகாரம் 43—அறிவுடைமை

421. அறிவுஅற்றம் காக்கும் கருவி ;
செறுவார்க்கும்
உள்அழிக்கல் ஆகா அரண்.

422. சென்ற இடத்தால் செலவிடாத் தீதுஒரீஇ
நன்றின்பால் உய்ப்பது அறிவு.

423. எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினும்
மெய்ப்பொருள் காண்ப தறிவு.

அப்பொருள்

424. எண்பொருள வாகச் செலச்சொல்லித்
தான்பிறர்வாய்
நுண்பொருள் காண்ப தறிவு.

425. உலகந் தழீஇயது ஒட்பம்; மலர்தலும்
கூம்பலும் இல்ல(து) அறிவு.

426. எவ்வது உறைவது உலகம் உலகத்தோடு
அவ்வது உறைவது அறிவு.

427. அறிவுடையார் ஆவது அறிவார்;
அறிவிலார்
அஃதறி கல்லா தவர்.

428. அஞ்சுவ(து) அஞ்சாமை பேதைமை;
அஞ்சல் அறிவார் தொழில்.

அஞ்சுவது

429. எதிரதாக் காக்கும் அறிவினார்க்கு இல்லை
அதிர வருவதோர் நோய்.

430. அறிவுடையார் எல்லாம் உடையார்;
என்னுடைய ரேனும் இலர்.

அறிவிலார்



## CHAPTER 43—ON KNOWLEDGE

421. The weapon of wisdom saves one from evil.
It is a citadel which cannot be destroyed by the foe.

422. Wisdom bridles the wandering mind, keeps it away from evil and bids it tread the right path.

423. Wisdom seeks the truth of all

things which are heard or uttered.

424. Wisdom unravels things subtle and seeks them in others.

425.

To befriend the world is wisdom ; and wisdom is not inconstant like the flower that blossoms and fades.

426. To be one with the world is wisdom.

427. Wisdom knows the future but not ignorance.

428. It is folly not to fear what must be feared. It is wisdom to fear what must be feared.

429. Men of foresight who guard themselves
against coming events know no distress.

430. The wise possess
are the unwise rich.

everything; but the poor





அதிகாரம் 44—குற்றங் கடிதல்

431. செருக்கும் சினமும் சிறுமையும் இல்லார்
பெருக்கம் பெருமித நீர்த்து.

432. இவறலும் மாண்பிறந்த மானமும் மாணா
உவகையும் ஏதம் இறைக்கு.

433. தினைத்துணையாம் குற்றம் வரினும்

பனைத்துணையாக்

கொள்வர் பழிநாணு வார்.

434. குற்றமே காக்க பொருளாகக் குற்றமே
அற்றம் தரூஉம் பகை.

435. வருமுன்னர்க் காவாதான் வாழ்க்கை
எரிமுன்னர்
வைத்தூறு போலக் கெடும்.

436. தன்குற்றம் நீக்கிப் பிறர்குற்றம்
காண்கிற்பின்
என்குற்றம் ஆகும் இறைக்கு.

437. செயற்பால செய்யா(து) இவறியான் செல்வம்
உயற்பால தன்றிக் கெடும்.

438. பற்றுள்ளம் என்னும் இவறன்மை
எற்றுள்ளும்
எண்ணப் படுவதொன்(று) அன்று.

439. வியவற்க எஞ்ஞான்றும் தன்னை ; நயவற்க

கன்றி பயவா வினை.

440. காதல காதல் அறியாமை உய்க்கிற்பின்

எதில ஏதிலார் நூல்.



## CHAPTER 44—ON RESTRAINING FAULTS

431. Exalted is the wealth that is free from pride, wrath and lust.

432. Niggardliness, empty honour, blind favour-
itism, are all the faults of a King.

433. Even the slightest fault looms large in the
eyes of those who dread dishonour.

434. Guard against your error as you would your wealth.
For error spells your ruin.

435. Like a piece of straw in a consuming flame,
will be destroyed the life of one who does not guard
against faults.

436. What fault will befall a King who is free
from guilt and detects guilt in others?

437. The hoarded wealth of the miser who fails
in his offices perishes.

438. A clutching greedy heart that knows no

charity commits the greatest folly.

439. Let not conceit enter your heart at any time
of your life; do not run after trifles.

440. Of what avail are the designs of the foe, if
one does not betray one's secrets?



அதிகாரம் 45—பெரியாரைத் துணைக்கோடல்

441. அறனறிந்து மூத்த அறிவுடையார் கேண்மை
திறனறிந்து தேர்ந்து கொளல்.

442. உற்றநோய் நீக்கி உறாஅமை முன்காக்கும்
பெற்றியார்ப் பேணிக் கொளல்.

443. அரியவற்றுள் எல்லாம் அரிதே பெரியாரைப்
பேணித் தமராக் கொளல்.

444. தம்மிற் பெரியார் தமரா ஒழுகுதல்
வன்மையுள் எல்லாம் தலை.

445. சூழ்வார்கண் ணாக ஒழுகலான் மன்னவன்
சூழ்வாரைச் சூழ்ந்து கொளல்.

446. தக்கார் இனத்தனாய்த் தான்ஒழுக வல்லானைச்
செற்றார் செயக்கிடந்த(து) இல்.

447. இடிக்கும் துணையாரை ஆள்வாரை யாரே
கெடுக்குந் தகைமை யவர்.

448. இடிப்பாரை இல்லாத ஏமரா மன்னன்
கெடுப்பார் இலானும் கெடும்.

449. முதலிலார்க்(கு) ஊதியம் இல்லை;
மதலையாம்
சார்பிலார்க்(கு) இல்லை நிலை.

450. பல்லார் பகைகொளலின் பத்தடுத்த தீமைத்தே
நல்லார் தொடர்கை விடல்.



## CHAPTER 45—ON ASSOCIATION WITH ELDERS

441. The friendship of virtuous men of mature wisdom is to be appreciated and secured.

442. Seek the friendship of those who can remove existing distress and guard against future.

443. To seek and win the alliance of the great is the rarest of all blessings.

444. To follow in the footsteps of those that are greater than oneself is the crown of one's strength.

445. Verily the ministers are the eyes of the monarch; let the monarch have tried ones.

446. No adversary can ruin the King who relies on his efficient counsellors.

447. None can harm the ruler who seeks the wholesome counsel of his ministers

though bitter.

448. The King who is not guarded by men of firm counsel will perish even though he has no enemies.

449. Is there profit without capital? Is there security for the monarch devoid of wise counsellors?

450. Greatly injurious is the forsaking of the friendship of the good; it is like encountering single-handed many foes.



அதிகாரம் 46—சிற்றினஞ்

451. சிற்றினம் அஞ்சும் பெருமை ; சிறுமைதான்
சுற்றமாச் சூழ்ந்து விடும்.

452. நிலத்தியல்பான் நீர்திரிந் தற்றாகும் ; மாந்தர்க்(கு)
இனத்தியல்பது ஆகும் அறிவு.

453. மனத்தானும் மாந்தர்க்(கு) உணர்ச்சி ; இனத்தானும்
இன்னான் எனப்படும் சொல்.

454. மனத்துளது போலக் காட்டி ஒருவற்(கு)
இனத்துள(து) ஆகும் அறிவு.

455. மனத்தூய்மை செய்வினை தூய்மை இரண்டும்
இனத்தூய்மை தூவா வரும்.

456. மனம்தூயார்க்(கு) எச்சம்நன் றாகும் ; இனம்தூயார்க்(கு)
இல்லைநன் றாகா வினை.

457. மனநலம் மன்னுயிர்க்(கு) ஆக்கம் ; இனநலம்
எல்லாப் புகழும் தரும்.

458. மனநலம் நன்குடைய ராயினும்
இனநலம் ஏமாப் புடைத்து.

சான்றோர்க்கு

459. மனநலத்தின் ஆகும் மறுமை ;மற் றஃதும்
இனநலத்தின் ஏமாப்பு உடைத்து.

460.
நல்லினத்தின் ஊங்குந் துணையில்லை ; தீயினத்தின்
அல்லற் படுப்பதூஉம் இல்.



## CHAPTER 46—ON AVOIDING LOW COMPANY

451. The great dread the company of the ignoble, for the ignoble delight in the

company of the mean.

452. Water smacks of the soil. The wisdom of man takes the colour of the company he keeps.

453. It is the mind that helps a man to gain knowledge: but it is one's association that makes people say what sort of man he is.

454. One's wisdom partakes of the nature of one's mind and one is known by the company he keeps.

455. Purity of mind and purity of action are of a piece with the purity of one's associates.

456. A good progeny awaits the pure. There is

no effort of one endowed with good company but bears fruit.

457. Company of the pure brings one all glory.

458. The wise may be pure in mind. Good company is the source of one's strength.

459. Heaven awaits the pure of heart · verily it is the reward of good company.

460. There is no greater evil than the company of the wicked.

## அதிகாரம் 47—தெரிந்து செயல்வகை

461. அழிவதூஉம் ஆவதூஉம் ஆகி வழிபயக்கும்
ஊதியமும் சூழ்ந்து செயல்.

462. தெரிந்த இனத்தொடு தேர்ந்தெண்ணிச் செய்வார்க்கு
அரும்பொருள் யாதொன்றும் இல்.

463. ஆக்கங் கருதி முதல்இழக்குஞ் செய்வினை
ஊக்கார் அறிவுடை யார்.

464. தெளிவி லதனைத் தொடங்கார் இளிவென்னும்
ஏதப்பாடு அஞ்சு பவர்.

465. வகையறச் சூழாது எழுதல் பகைவரைப்

பாத்திப் படுப்பதோர் ஆறு.

466. செய்தக்க அல்ல செயக்கெடும்; செய்தக்க
செய்யாமை யானும் கெடும்.

467. எண்ணித் துணிக கருமம்; துணிந்தபின்
எண்ணுவம் என்பது இழுக்கு.

468. ஆற்றின் வருந்தா வருத்தம் பலர்நின்று

போற்றினும் பொத்துப் படும்.

469. நன்றாற்ற லுள்ளுந் தவறுண்(டு); அவரவர்
பண்பறிந்து ஆற்றாக் கடை.

470.

எள்ளாத எண்ணிச் செயல்வேண்டும்; தம்மொடு
கொள்ளாத கொள்ளா(து) உலகு.

# CH. 47—ON ACTION AFTER DUE DELIBERATION

461. After much deliberation over profit and loss and the final gains, launch on a task.

462. Nothing is impossible for those who act after listening to the counsel of persons of known probity.

463. The wise do not approve of the action of those who lose their capital anticipating some distant gain.

464. Men who dread ignominy never embark on a work without deliberation.

465. A thoughtless expedition only fosters the might of one's foes.

466. To do a thing which ought not to be done is to court trouble ; to fail to do a thing which ought to be done is to land oneself in ruin.

467. Begin your task after much deliberation. To think after launching an action is to court a grievous blunder.

468. An ill-organised scheme though supported by many goes to pieces.

469. Even a good scheme falls through if we do not divine aright the disposition of men.

470. Let not the king do any unwise act lest the world should hold him in scorn.

7

471. வினைவலியும் தன்வலியும் மாற்றான் வலியும்
துணைவலியும் தூக்கிச் செயல்.

472. ஒல்வது அறிவது அறிந்ததன் கண்தங்கிச்
செல்வார்க்குச் செல்லாதது இல்.

473. உடைத்தம் வலிஅறியார் ஊக்கத்தின் ஊக்கி
இடைக்கண் முரிந்தார் பலர்.

474. அமைந்தாங்கு ஒழுகான் அளவறியான் தன்னை
வியந்தான் விரைந்து கெடும்.

475. பீலிபெய் சாகாடும் அச்சுஇறும் அப்பண்டம்
சால மிகுத்துப் பெயின்.

476. நுனிக்கொம்பர் ஏறினார் அஃதுஇறந்து ஊக்கின்
உயிர்க்கிறுதி ஆகி விடும்.

477. ஆற்றின் அளவறிந்து ஈக; அதுபொருள்
போற்றி வழங்கு நெறி.

478. ஆகுஆறு அளவுஇட்டிது ஆயினும்
கேடில்லை
போகுஆறு அகலாக் கடை.

479. அளவறிந்து வாழாதான் வாழ்க்கை
உளபோல
இல்லாகித் தோன்றாக் கெடும்.

480. உளவரை தூக்காத ஒப்புரவு ஆண்மை
வளவரை வல்லைக் கெடும்.



## CH. 48—ON KNOWING THE ENEMY'S STRENGTH

471. A king must act after measuring the strength of his plan, his own resources, the strength of the enemy and

that of the ally.

472. Nothing is impossible for them who know the nature of their task and throw themselves heart and soul into it.

473. Many kings have failed in the middle of their enterprise, for they have launched on it in their blind ignorant zeal.

474. He who is ignorant of the might of his foe and who thinks too much of himself will come to grief.

475. The axle of a cart breaks even under the overload of a peacock's feathers.

476. Over-vaulting ambition perishes.

477. Let your charity be according to the measure of your wealth.

That is the way to preserve it.

478. No harm comes of one's small earnings. Let not one's expense out-run one's income.

479. The seeming prosperity of the extravagant perishes.

480. The fortune of one, lavish of charity beyond measure, goes to rack and ruin.



## அதிகாரம் 49—காலம் அறிதல்

481. பகல்வெல்லும் கூகையைக் காக்கை ; இகல்வெல்லும்
வேந்தர்க்கு வேண்டும் பொழுது.

482. பருவத்தோ(டு) ஒட்ட ஒழுகல் திருவினைத்
தீராமை ஆர்க்கும் கயிறு.

483. அருவினை என்ப உளவோ கருவியால்
காலம் அறிந்து செயின்.

484. ஞாலங் கருதினும் கைகூடும் காலம்
கருதி இடத்தாற் செயின்.

485. காலங் கருதி இருப்பர் கலங்காது
ஞாலங் கருது பவர்.

486. ஊக்கம் உடையான் ஒடுக்கம் பொருதகர்
தாக்கற்குப் பேரும் தகைத்து.

487.

பொள்ளென ஆங்கே புறம்வேரார் காலம்
உள்வேர்ப்பர் ஒள்ளி யவர்.

பார்த்து

488. செறுநரைக் காணின் சுமக்க; இறுவரை
காணின் கிழக்காம் தலை.

489. எய்தற் கரியது இயைந்தக்கால்
அந்நிலையே

செய்தற் கரிய செயல்.

490. கொக்கொக்க கூம்பும் பருவத்து ; மற்றதன்
குத்தொக்க சீர்த்த இடத்து.



## CHAPTER 49—ON KNOWING THE TIME

481. During the day the crow conquers the owl. So the monarch who wishes to defeat the enemy must choose the proper time.

482. Action at the appropriate hour is the rope
that holds for ever the Goddess of Fortune
to the King.

483. Is there anything impossible if one acts at the right time and with the proper equipment?

484. One can succeed in the attempt to conquer the world if the right time and the right place are chosen.

485. He who without any fear aims at the con- quest of the world will await the season for it.

486. The self-restraint of the mighty is like the drawing back of the fighting ram just before its attack.

487. The wise will not fly into a passion when assailed; they allow their anger to smoulder within till the right time comes.

488. Bow before the enemy till the time of his destruction. When the hour comes, strike

him down.

489. Do not let slip a golden opportunity ; when the hour dawns, attempt the impossible.

490. When the time is not ripe, be still as a heron. But at the ripe hour, attack the enemy without missing your aim.

---



அதிகாரம் 50—இடன் அறிதல்

491. தொடங்கற்க எவ்வினையும் எள்ளற்க முற்றும்
இடங்கண்ட பின்னல் லது.

492. முரண்சேர்ந்த மொய்ம்பி னவர்க்கும் அரண்சேர்ந்தாம்
ஆக்கம் பலவும் தரும்.

493. ஆற்றாரும் ஆற்றி அடுப ; இடன் அறிந்து
போற்றார்கண் போற்றிச் செயின்.

494. எண்ணியார் எண்ணம் இழப்பர்
இடனறிந்து
துன்னியார் துன்னிச் செயின்.

495. நெடும் புனலுள் வெல்லும் முதலை ;
அடும்புனலின் நீங்கின் அதனைப் பிற.

496. கடலோடா கால்வல் நெடுந்தேர் ;
கடலோடு
நாவாயும் ஓடா நிலத்து.

497. அஞ்சாமை அல்லால் துணைவேண்டா
எஞ்சாமை
எண்ணி இடத்தான் செயின்.

498. சிறுபடையான் செல்இடம் சேரின்
உறுபடையான்
ஊக்கம் அழிந்து விடும்.

499. சிறைநலனும் சீரும் இலரெனினும்

மாந்தர் உறைநிலத்தோடு ஒட்டல் அரிது.

500. காலாழ் களரின் நரிஅடும் கண்அஞ்சா
வேலான் முகத்த களிறு.



## CHAPTER 50—ON KNOWING THE PLACE

491. Scorn not the foe; embark not on any action till you secure a coign of vantage to overwhelm him.

492. Even to men of great valour and power,
manifold are the advantages yielded by a fortress.

493. Even the weak are able to win if they choose
the right place to assail the foe.

494. If a king stations himself at a right place

the conquering foe loses all hope.

495. The crocodile in waters deep overpowers all ;
once it leaves the waters, he falls an easy prey to its foes.

496. The strong wheeled lofty chariot cannot cross
the seas, nor can ocean-sailing ships move on land.

497. If one selects a suitable place by one's
discretion, no other help is needed.

498. Ruined will be the strength of one who takes
a large army to a place where the enemy of small forces
is entrenched.

499. A people may not have either strength or
strongholds ; still it is difficult to fight

with them on

their own soil.

500. A mad elephant that kills the bold spearman

is killed even by a jackal when it gets stuck up in the

mire.



அதிகாரம் 51—தெரிந்து தெளிதல்

501. அறம்பொருள் இன்பம் உயிரச்சம் நான்கின்
திறம்தெரிந்து தேறப் படும்.

502. குடிப்பிறந்து குற்றத்தின் நீங்கி வடுப்பரியும்
நாணுடையான் கட்டே தெளிவு.

503. அரியகற்(று) ஆசற்றார் கண்ணும் தெரியுங்கால்
இன்மை அரிதே வெளிறு.

504. குணநாடிக் குற்றமும் நாடி அவற்றுள்

மிகைநாடி மிக்க கொளல்.

505. பெருமைக்கும் ஏனைச் சிறுமைக்கும் தத்தம்
கருமமே கட்டளைக் கல்.

506. அற்றாரைத் தேறுதல் ஓம்புக ; மற்றவர்
பற்றிலர் நாணார் பழி.

507. காதன்மை கந்தா அறிவறியார்த் தேறுதல்
பேதைமை எல்லாந் தரும்.

508. தேரான் பிறனைத் தெளிந்தான் வழிமுறை
தீரா இடும்பை தரும்.

509. தேறற்க யாரையும் தேராது : தேர்ந்தபின்
தேறுக தேறும் பொருள்.

510.

தேரான் தெளிவும் தெளிந்தான்கண் ஐயுறவும்
தீரா இடும்பை தரும்.



## CH. 51—ENGAGING SERVANTS AFTER TEST

501. One should be chosen after putting one to a fourfold test of righteousness, wealth, inclination and fear of life and death.

502. One of good family, free of faults, and possessed of a wholesome fear of sin, should be chosen.

503. One may be an unblemished man and of vast

learning: but it is rare to find one free from ignorance.

504. Examine the good and bad in a person and judge his character according to what predominates in his composition.

505. One's own deed is the touchstone of one's greatness and littleness.

506. Choose not persons who have no kith and kin, and who possess no social instincts : they will be callous of heart and dread no crime.

507. It is the height of folly to

choose the ignor-
ant blinded by affection.

508. To choose a stranger without knowing his
traits results in one's grief.

509. Let men be chosen with deliberate care;
when once the choice is made, let no suspicions crump
into your soul.

510. To choose men with no forethought and to
suspect them will land you in endless woes.

## அதிகாரம் 52—தெரிந்து வினையாடல்

511. நன்மையும் தீமையும் நாடி நலம்புரிந்த
தன்மையான் ஆளப் படும்.

512. வாரி பெருக்கி வளம்படுத்(து) உற்றவை
ஆராய்வான் செய்க வினை.

513. அன்பறிவு தேற்றம் அவாஇன்மை இந்நான்கும்
நன்குடையான் கட்டே தெளிவு.

514. எனைவகையால் தேறியக் கண்ணும் வினைவகையான்
வேறாகும் மாந்தர் பலர்.

515. அறிந்தாற்றிச் செய்கிற்பாற்(கு) அல்லால் வினைதான்
சிறந்தானென்(று) ஏவற்பாற் றன்று.

516. செய்வானை நாடி வினைநாடிக் காலத்தோடு

எய்த உணர்ந்து செயல்.

517. இதனை இதனால் இவன்முடிக்கும் என்றாய்ந்(து)
அதனை அவன்கண் விடல்.

518. வினைக்(கு) உரிமை நாடிய பின்றை அவனை
அதற்குரிய னாகச் செயல்.

519. வினைக்கண் வினையுடையான் கேண்மைவே றாக
நினைப்பானை நீங்கும் திரு.

520. நாடோறும் நாடுக மன்னன் வினைசெய்வான்
கோடாமை கோடா(து) உலகு.



## CH. 52—ON APPOINTMENT ACCORDING TO MERIT

511. After examining the good and

to the good.

the bad, cling

512. He who taps all productive sources and guards against losses is the true servant.

513. Choose men, who are endowed with love, wisdom, clever vision and freedom from covetousness.

514. Position corrupts even the men of our own deliberate choice.

515. Let worth prevail. Let not blind affection dictate the choice of men.

516. The thing to be done, the proper person for it and the appropriate time for doing it,

must all be duly weighed.

517. Let the king be first convinced of the com- petency of a person; then he shall allow him to move freely in the sphere of his appointed task.

518. Choose men of approved merit and then make them worthy of the station.

519. Prosperity deserts one who suspects the motives of a servant ever loyal to his work.

520. Let them not swerve from the right path for on them rests the just conduct of the world.

## அதிகாரம் 53—சுற்றந்தழால்

521. பற்றற்ற கண்ணும் பழமைபா ராட்டுதல்
சுற்றத்தார் கண்ணே உள.

522. விருப்பறாச் சுற்றம் இயையின் அருப்பறா
ஆக்கம் பலவுந் தரும்.

523. அளவளாவு இல்லாதான் வாழ்க்கை குளவளாக்
கோடின்றி நீர்நிறைந் தற்று.

524. சுற்றத்தால் சுற்றப் படஒழுகல் செல்வந்தான்
பெற்றத்தால் பெற்ற பயன்.

525. கொடுத்தலும் இன்சொலும் ஆற்றின் அடுக்கிய
சுற்றத்தால் சுற்றப் படும்.

526. பெருங்கொடையான் பேணான் வெகுளி அவனின்
மருங்குடையார் மாநிலத்(து) இல்.

527. காக்கை கரவாக் கரைந்துண்ணும்; ஆக்கமும்
அன்னநீ ரார்க்கே உள.

528. பொதுநோக்கான் வேந்தன் வரிசையா நோக்கின்
அதுநோக்கி வாழ்வார் பலர்.

529. தமராகித் தற்றுறந்தார் சுற்றம் அமராமைக்
காரணம் இன்றி வரும்.

530. உழைப்பிரிந்து காரணத்தின் வந்தானை வேந்தன்
இழைத்திருந்(து) எண்ணிக் கொளல்.

## CHAPTER 53—ON CHERISHING ONE'S KINDRED

521. One's own kith and kin only cherish their old attachments to men though out of suit with fortune.

522. One's unceasing kinship is the source of all one's fortune.

523. The life of one with no kin will be like over-flowing waters of a tank with no bund.

524. The value of one's wealth consists in a life surrounded by one's kinsmen.

525. One delights in the company of one generous of heart and suave of speech.

526. Nothing

excels on earth the love of one large of heart and free of wrath, but shares it with the rest.

527. Fortune smiles on one of like disposition.

528. The king must not be indifferent to one's deserts but reward people according to their merit.

529. Reject none on the score of disagreement.
Men who have become estranged will flock to you.

530. Let the king embrace his estranged kith and
kin by redressing their grievances.

## அதிகாரம் 54—பொச்சாவாமை

531. இறந்த வெகுளியின் தீதே சிறந்த
உவகை மகிழ்ச்சியின் சோர்வு.

532. பொச்சாப்புக் கொல்லும் புகழை அறிவினை
நிச்ச நிரப்புக்கொன் றாங்கு.

533. பொச்சாப்பார்க்(கு) இல்லை புகழ்மை ; அதுஉலகத்து
எப்பால்நூ லோர்க்கும் துணிவு.

534. அச்சம் உடையார்க்(கு) அரணில்லை ; ஆங்கில்லை
பொச்சாப் புடையார்க்கு நன்கு.

535. முன்னுறக் காவா(து) இழுக்கியான் தன்பிழை
பின்னூ(று) இரங்கி விடும்.

536. இழுக்காமை யார்மாட்டும் என்றும்

வழுக்காமை
வாயின் அதுஒப்ப தில்.

537. அரியஎன்று ஆகாத இல்லை பொச் சாவாக்
கருவியால் போற்றிச் செயின்.

538. புகழ்ந்தவை போற்றிச் செயல்வேண்டும் ; செய்யா(து)
இகழ்ந்தார்க்(கு) எழுமையும் இல்.

539. இகழ்ச்சியிற் கெட்டாரை உள்ளுக தாம்தம்
மகிழ்ச்சியின் மைந்துறும் போழ்து.

540. உள்ளிய(து) எய்தல் எளிதுமன் மற்றுந்தான்
உள்ளியது உள்ளப் பெறின்.



CHAPTER 54—AGAINST FORGETFULNESS

531. Forgetfulness which cometh of mad joy is more dangerous than wild wrath.

532. Poverty freezes knowledge.

Forgetfulness blights one's reputation.

533. Fame is not for the thoughtless, so say the scriptures of the world.

534. Of what avail is a citadel to a crown, what good availeth the thoughtless ?

535. He who is not on his guard against impending evil, rues his folly.

536. There is no greater good than to be ever on the vigil.

537. Nothing is impossible for the thoughtful.

538. No good awaits him in birth

to come who
fails of his noble deeds.

539. When drunk with delight, remember those
who have perished through wilful neglect.

540. No task is difficult to the thoughtful and the
diligent.



அதிகாரம் 55—செங்கோன்மை

541. ஓர்ந்துகண் ணோடா(து) இறைபுரிந்து யார்மாட்டும்
தேர்ந்துசெய் வஃதே முறை.

542. வானோக்கி வாழும் உலகெல்லாம் ; மன்னவன்
கோனோக்கி வாழும் குடி.

543. அந்தணர் நூற்கும் அறத்திற்கும் ஆதியாய்
நின்றது மன்னவன் கோல்.

544. குடிதழீஇக் கோலோச்சு மாநில மன்னன்
அடிதழீஇ நிற்கும் உலகு.

545. இயல்புளிக் கோலோச்சு மன்னவன் நாட்ட
பெயலும் விளையுளும் தொக்கு.

546. வேலன்று வென்றி தருவது; மன்னவன்
கோலதூஉம் கோடா(து) எனின்.

547. இறைகாக்கும் வையகம் எல்லாம்; அவனை
முறைகாக்கும் முட்டாச் செயின்.

548. எண்பதத்தான் ஓரா முறைசெய்யா
மன்னவன்
தன்பதத்தால் தானே கெடும்.

549. குடிபுறங் காத்தோம்பிக் குற்றங் கடிதல்
வடுவன்று வேந்தன் தொழில்.

550.

கொலையிற் கொடியாரை வேந்தொறுத்தல், பைங்கூழ்
களைகட் டதனொடு நேர்.



## CHAPTER 55—ON RIGHTEOUS SCEPTRE

541. Strict enquiry, and impartial justice mark the rule of a just monarch.

542. The world looks to rain for its existence. The subjects look to the sceptre for their existence.

543. The king's sceptre is the standing proof of Brahmanical books and their teachings.

544. The world falls at the feet of a

great King who wields the sceptre for his subjects' welfare.

545. Both seasonal rains and waving corn are
seen in the land of a righteous monarch.

546. Victory is won not by the spear but by the
unswerving sceptre of a monarch.

547. The king protects the whole world and
justice protects him

if unfailingly administered.

548. The king who does not administer impartial justice goes to ruin.

549. To punish crime is the duty, not the fault
of the king who attends to the welfare of his subjects.

550. Punishing murderers with death is like
plucking out weeds among the crops.





## அதிகாரம் 56—கொடுங்கோன்மை

551. கொலைமேற் கொண்டாரில் கொடிதே அலைமேற்கொண்டு
அல்லவை செய்தொழுகும் வேந்து.

552. வேலொடு நின்றான் இடுஎன் றது போலும்
கோலொடு நின்றான் இரவு.

553. நாடொறும் நாடி முறைசெய்யா மன்னவன்
நாடொறும் நாடு கெடும்.

554. கூழுங் குடியும் ஒருங்கிழக்கும் கோல்கோடிச்
சூழாது செய்யும் அரசு.

555. அல்லற்பட்(டு) ஆற்றாது அழுதகண் ணீர்அன்றே
செல்வத்தைத் தேய்க்கும் படை.

556. மன்னர்க்கு மன்னுதல் செங்கோன்மை ; அஃதின்றேல்
மன்னாவாம் மன்னர்க்கு ஒளி.

557. துளிஇன்மை ஞாலத்திற்(கு) எற்றற்றே வேந்தன்
அளிஇன்மை வாழும் உயிர்க்கு.

558. இன்மையின் இன்னா(து) உடைமை முறைசெய்யா
மன்னவன் கோற்கீழ்ப் படின்.

559. முறைகோடி மன்னவன் செய்யின் உறைகோடி
ஒல்லாது வானம் பெயல்.

560. ஆபயன் குன்றும்; அறுதொழிலோர் நூல்மறப்பர்;
காவலன் காவான் எனின்.



CHAPTER 56—ON UNRIGHTEOUS RULE.

551. The unrighteous king who oppresses his subjects is more cruel than the one who leads the life of a murderer.

552. The wielder of the sceptre asking for gifts,
is like the spearman asking the way-farer 'give.'

553. That country will perish any day whose
monarch does not administer justice day by day.

554. That king who allows his sceptre to bend
indiscriminately will lose his wealth together with his subjects.

555. Are not the tears, shed as a result of oppres-
sion, the weapons which destroy the prosperity of the
monarch ?

556. Good Government makes one's rule endur-
ing. Where it is not found, his lustre will not last long.

557. The people who live under a graceless king
suffer like the earth unvisited by drops of rain.

558. Where people possess a king, who does not

enforce justice, wealth does not confer more happiness

than poverty.

559.
Were the king to rule unjustly, the Heavens

would withhold rains.

560. If the protecting monarch fails in his duties,

the yield of cows will diminish and Brahmans with

their six duties will forget their Vedas.



அதிகாரம் 57—வெருவந்த செய்யாமை

561. தக்காங்கு நாடித் தலைச்செல்லா வண்ணத்தால்

ஒத்தாங்(கு) ஒறுப்பது வேந்து.

562. கடிதோச்சி மெல்ல எறிக ; நெடிதுஆக்கம்
நீங்காமை வேண்டு பவர்.

563. வெருவந்த செய்தொழுகும் வெங்கோலன் ஆயின்
ஒருவந்தம் ஒல்லைக் கெடும்.

564. இறைகடியன் என்றுரைக்கும் இன்னாச்சொல் வேந்தன்
உறைகடுகி ஒல்லைக் கெடும்.

565. அருஞ்செவ்வி இன்னா முகத்தான் பெருஞ்செல்வம்
பேஎய்கண்(டு) அன்ன(து) உடைத்து.

566. கடுஞ்சொல்லன் கண்ணிலன் ஆயின் நெடுஞ்செல்வம்
நீடின்றி ஆங்கே கெடும்.

567. கடுமொழியும் கையிகந்த தண்டமும் வேந்தன்
அடுமுரண் தேய்க்கும் அரம்.

568. இனத்தாற்றி எண்ணாத வேந்தன்
சினத்தாற்றிச் சீறின் சிறுகும் திரு.

569. செருவந்த போழ்தின் சிறைசெய்யா வேந்தன்
வெருவந்து வெய்து கெடும்.

570. கல்லார்ப் பிணிக்கும் கடுங்கோல்; அதுவல்ல(து)
இல்லை நிலக்குப் பொறை.



## CHAPTER 57—ON TYRANNY

561. A righteous king investigates and fittingly punishes the wrongdoer so that he may not repeat it.

562. If you wish enduring prosperity behave as if you punish excessively, but do it mildly.

563. The tyrant who terrifies his subjects will soon perish.

564. That king whom people speak of as a tyrant will rapidly perish.

565. The great wealth of a king who is inaccessible
and assumes a fearful look, is no better than that in
the possession of a demon.

566. The abundant wealth of a king who utters
harsh words and puts on unkind looks will not last long.

567. Severity in speech and excess

in punishment
are like the file which removes his capacity to destroy
(his enemies).

568. The prosperity of a king who does not consult his advisers but makes them the victims of his fury
will shrink.

569. If a king who has no fortress meets a foe,
he will be ruined by fear.

570. No burden is harder for the earth to bear
than the cruel sceptre wielded by the unwise.

## அதிகாரம் 58—கண்ணோட்டம்

571. கண்ணோட்டம் என்னும் கழிபெருங் காரிகை
உண்மையான் உண்டுஇவ் வுலகு.

572. கண்ணோட்டத்(து) உள்ளது உலகியல் ; அஃதிலார்
உண்மை நிலக்குப் பொறை.

573. பண்என்ஆம் பாடற்(கு) இயைபுஇன்றேல் ; கண்என்னும்
கண்ணோட்டம் இல்லாத கண்.

574. உளபோல் முகத்தெவன் செய்யும் அளவினால்
கண்ணோட்டம் இல்லாத கண்.

575. கண்ணிற்(கு) அணிகலம் கண்ணோட்டம் அஃதின்றேல்
புண்ணென்று உணரப் படும்.

576. மண்ணோ(டு) இயைந்த மரத்தனையர்

கண்ணோடு
இயைந்துகண் ணோடா தவர்.

577. கண்ணோட்டம் இல்லவர் கண்ணிலர்; கண்ணுடையார்
கண்ணோட்டம் இன்மையும் இல்.

578. கருமம் சிதையாமல் கண்ணோட வல்லார்க்(கு)

உரிமை யுடைத்திவ் வுலகு.

579. ஒறுத்தாற்றும் பண்பினர் கண்ணும்கண் ணோடிப்
பொறுத்தாற்றும் பண்பே தலை.

580. பெயக்கண்டு நஞ்சுண்(டு) அமைவர் நயத்தக்க
நாகரிகம் வேண்டு பவர்.



CHAPTER 58—ON KINDLINESS

571. The world exists because of the

existence of the most beautiful virtue called kindliness.

572. The world lives through kindliness; those who do not have it are a burden to the earth.

573. What is the use of a song that could not be enjoyed? Likewise, what is the use of the eyes that have no kindliness?

574. What is the use of one's eyes if they do not beam with immeasurable love?

575. Kindliness is the fitting ornament for the eyes. The eyes are a sore, where it is absent.

576. Those whose eyes do not reflect love resemble trees that stand on the earth.

577. Verily they are blind who have no kindly look.

578. The world belongs to a king who can do his duty and yet be courteous.

5 79.
It behoves a king to put up with the doer of harm and even be kind to him.

580. Those who wish to acquire loveable urbanity will knowingly swallow even the poison served.



அதிகாரம் 59—ஒற்றாடல்

581. ஒற்றும் உரைசான்ற நூலும் இவைஇரண்டும்
தெற்றென்க மன்னவன் கண்.

582. எல்லார்க்கும் எல்லாம் நிகழ்பவை எஞ்ஞான்றும்
வல்லறிதல் வேந்தன் தொழில்.

583. ஒற்றினான் ஒற்றிப் பொருள்தெரியா மன்னவன்
கொற்றம் கொளக்கிடந்தது இல்.

584. வினைசெய்வார் தஞ்சுற்றம் வேண்டாதார் என்றாங்கு
அனைவரையும் ஆராய்வ(து) ஒற்று.

585. கடாஅ உருவொடு கண்ணஞ்சாது யாண்டும்
உகாஅமை வல்லதே ஒற்று.

586. துறந்தார் படிவத்தர் ஆகி இறந்தாராய்க்(து)
என்செயினும் சோர்வில்(து) ஒற்று.

587. மறைந்தவை கேட்கவற் றாகி அறிந்தவை
ஐயப்பா(டு) இல்லதே ஒற்று.

588. ஒற்றொற்றித் தந்த பொருளையும் மற்றுமோர்
ஒற்றினால் ஒற்றிக் கொளல்.

589. ஒற்றொற்(று) உணராமை ஆள்க; உடன்மூவர்
சொற்றொக்க தேறப் படும்.

590. சிறப்பறிய ஒற்றின்கண் செய்யற்க; செய்யின்
புறப்படுத்தான் ஆகும் மறை.



CHAPTER 59—ON SPIES

581. Verily the two eyes of a king are espionage
and the celebrated code of laws.

582. A king's duty is to get day to day knowledge
of everything that happens.

583. The sure way of achieving success for a
king is to get correct information from spies.

584. Espionage consists of watching all people,
to wit, the king's employees, his relations and his
enemies.

585. An able spy puts on undoubted disguise,
does not fear when detected, and never reveals his
purpose.

586. A spy in the guise of an ascetic should
gather information however difficult and should never
be tired whatever be the troubles.

587. A spy should secure

knowledge of things
secret and should have no doubt
about his information.

588. One must get
confirmed the information
supplied by one spy, by that of another.

589. Let the engagement of one spy be not known to another. Accept the information supplied independently by three spies.

590. Let not a king honour the
spy publicly ;
for, by so doing he
will be letting out his own secret.



அதிகாரம் 60—ஊக்க முடைமை

591. உடையர் எனப்படுவது ஊக்கம்;
அஃதில்லார்

உடையது உடையரோ மற்று.

592. உள்ளம் உடைமை உடைமை ;
பொருளுடைமை
நில்லாது நீங்கி விடும்.

593. ஆக்கம் இழந்தேம்என்(று) அல்லாவார்
ஊக்கம்
ஒருவந்தம் கைத்துடை யார்.
594. ஆக்கம் அதர்வினாய்ச் செல்லும் அசைவிலா

ஊக்கம் உடையா னுழை.

595. வெள்ளத்(து) அனைய மலர்நீட்டம் ;
மாந்தர்தம்
உள்ளத்(து) அனையது உயர்வு.

596. உள்ளுவது எல்லாம் உயர்வுஉள்ளல் ;
தள்ளினும் தள்ளாமை நீர்த்து.

மற்றது

597. சிதைவிடத்து ஒல்கார் உரவோர்;
புதைஅம்பின்
பட்டுப்பாடு ஊன்றுங் களிறு.

598. உள்ளம் இலாதவர் எய்தார் உலகத்து
வள்ளியம் என்னும் செருக்கு.

599. பரியது கூர்ங்கோட்ட(து) ஆயினும் யானை
வெரூஉம் புலிதாக் குறின்.

600. உரம்ஒருவற்கு உள்ள வெறுக்கை;
மரம்;மக்கள் ஆதலே வேறு.

அஃதில்லார்



## CHAPTER 60—ON EXERTION

591. One's real possession is one's exertion. If one does not have it, can anything else?

one be said to really possess

592. Exertion alone is one's wealth; inconstant material wealth will pass away.

593. Those who possess constant exertion will not grieve over the loss of their wealth.

594. Prosperity will discover a of undaunted will.

route to a person

595. The length of a watery plant is determined by the depth of the water. Likewise the greatness of a person is proportionate to the strength of his will power.

596. In
ideal. Even

all acts and deeds, let exertion be one's if it were unattainable, its presence is enough.

597. The elephant stands undaunted despite piercing arrows ; so too, a person of strong will, will not get discouraged even in a losing concern.

598. A man of no strong will, cannot win the esteem of the world for his action.

599. Even the huge elephant with sharp tusks dreads the attacking tiger.

600. One's strength is one's exertion. Without it persons are only trees in the form of men.

## அதிகாரம் 61—மடியின்மை

601. குடியென்னும் குன்றா விளக்கம்
மடியென்னும்
மாசூர மாய்ந்து கெடும்.

602. மடியை மடியா ஒழுகல் குடியைக்
குடியாக வேண்டு பவர்.

603. மடிமடிக் கொண்டொழுகும் பேதை பிறந்த
குடிமடியும் தன்னினும் முந்து.

604. குடிமடிந்து குற்றம் பெருகும் மடிமடிந்து
மாண்ட உஞற்றி லவர்க்கு.

605. நெடுநீர் மறவி மடிதுயில் நான்கும்
கெடுநீரார் காமக் கலன்.

606. படியுடையார் பற்றமைந்தக் கண்ணும்
மடியுடையார்
மாண்பயன் எய்தல் அரிது.

607. இடிபுரிந்(து) எள்ளும்சொல் கேட்பர்
மடிபுரிந்து மாண்ட உஞற்(று)இ லவர்.

608. மடிமை குடிமைக்கண் தங்கின்தன் ஒன்னார்க்கு
அடிமை புகுத்தி விடும்.

609. குடிஆண்மை உள்வந்த குற்றம் ஒருவன்
மடிஆண்மை மாற்றக் கெடும்.

610. மடியிலா மன்னவன் எய்தும் அடியளந்தான்
தாஅய தெல்லாம் ஒருங்கு.



## CHAPTER 61—AGAINST SLOTH

601. If sloth extends its darkness it will extin- guish the lustrous lamp of one's family.

602. Those who wish the esteem of their family

should never encourage sloth.

603. The family of the fool who hugs sloth in his own lap fades away before him.

604. Faults will be many among those who are devoid of exertion and will result in the ruin of their families.

605. Procrastination, carelessness, sluggardliness and sleep are the four boats fondly entered into by those who go to ruin.

606. Even when the wealth of the rulers of all earth is within his reach, the slothful will hardly derive any great benefit from it.

607. Lovers of idleness with no

praiseworthy
exertion will be the butt
of disgrace and will receive
words of rebuke.

608. If sloth comes to stay in one's family, it will
make one the slave of one's enemies.

609. By conquering
sloth, one can wipe out the
reproach that has come over one's family.

610. All the universe
once measured by God
will be with the king of no sloth.



அதிகாரம் 62—ஆள்வினை யுடைமை

611. அருமை உடைத்தென்(று) அசாவாமை வேண்டும் ;
பெருமை முயற்சி தரும்.

612. வினைக்கண் வினைகெடல் ஓம்பல் வினைக்குறை
தீர்ந்தாரின் தீர்ந்தன்று உலகு.

613. தாளாண்மை என்னும் தகைமைக்கண் தங்கிற்றே
வேளாண்மை என்னும் செருக்கு.

614. தாளாண்மை இல்லாதான் வேளாண்மை பேடிகை
வாளாண்மை போலக் கெடும்.

615. இன்பம் விழையான் வினைவிழைவான் தன்கேளிர்
துன்பந் துடைத்(து)ஊன்றும் தூண்.

616. முயற்சி திருவினை யாக்கும் : முயற்றின்மை
இன்மை புகுத்தி விடும்.

617. மடியுளாள் மாமுகடி யென்ப : மடியிலான்
தாளுளாள் தாமரையி னாள்.

618. பொறியின்மை யார்க்கும் பழியன்(று)
அறிவறிந்(து) ஆள்வினை இன்மை பழி.

619. தெய்வத்தான் ஆகா(து) எனினும் முயற்சிதன்
மெய்வருத்தக் கூலி தரும்.

620. ஊழையும் உப்பக்கம் காண்பர் உலைவின்றித்
தாழா(து) உஞற்று பவர்.



## CHAPTER 62—ON PERSEVERANCE

611. Do not give up (your task) saying 'O It is very difficult.' The art of doing it comes of exertion.

612. Do not give up your task in the middle; for the world will abandon those who leave their task unfinished.

613. The greatness which consists in helping others dwells in the virtue of persevering effort.

614. The service of one with no persevering effort is vain like the sword wielded by a hermaphrodite.

615. One who does not seek pleasure but delights in work will be a pillar of support to one's relatives in their sorrow.

616. Exertion achieves wealth;

absence of it brings on poverty.

617. Goddess of misfortune dwells in sloth ; the Goddess of fortune lives in exertion.

618. Ill-luck is no disgrace ; but it is a disgrace if one does not exert himself as to what should be done.

619. Though fate should ordain failure, bodily exertion will yield its own reward.

620. Those who labour hard, undaunted by obstacles will overcome destiny.



அதிகாரம் 63—இடுக்கணழியாமை

621. இடுக்கண் வருங்கால் நகுக: அதனை
அடுத்தூர்வ(து) அஃதொப்ப தில்.

622. வெள்ளத் தனைய இடும்பை அறிவுடையான்
உள்ளத்தின் உள்ளக் கெடும்.

623. இடும்பைக்(கு) இடும்பை படுப்பர்
இடும்பைக்(கு)
இடும்பை படாஅ தவர்.

624. மடுத்தவாய் எல்லாம் பகடுஅன்னான் உற்ற
இடுக்கண் இடர்ப்பா(டு) உடைத்து.

625. அடுக்கி வரினும் அழிவிலான் உற்ற
இடுக்கண் இடுக்கண் படும்.

626. அற்றேமென்(று) அல்லல் படுபவோ
பெற்றேமென்(று)
ஓம்புதல் தேற்றா தவர்.

627. இலக்கம் உடம்புஇடும்பைக்(கு) என்று
கலக்கத்தைக்
கையாறாக் கொள்ளாதாம் மேல்.

628. இன்பம் விழையான் இடும்பை

இயல்பென்பான்
துன்பம் உறுதல் இலன்.

629. இன்பத்துள் இன்பம் விழையாதான்
துன்பத்துள்
துன்பம் உறுதல் இலன்.

630. இன்னாமை இன்பம் எனக்கொளின்
ஆகுந்தன்
ஒன்னார் விழையுஞ் சிறப்பு.



## CHAPTER 63—ON COURAGE

621. Laugh over your obstacles; nothing like it
to push them further and further.

622. Troubles like a flood will be overcome by a courageous thought rising in the minds of the wise.

623. The courageous will be causing sorrow to sorrow itself.

624. Just as the buffalo drags a cart through miry depth, one who fights on will overcome his difficulties.

625. The troubles of one who braves a series of adversity wear out and disappear.

626. Will those who do not during prosperity exultingly say "we are rich", cry out (during adversity)

"Oh, we are destitute"?

627. The great know that the body is ever the target of trouble and will not regard trouble as trouble at all.

628. He who never gives way to sorrow, will not long for pleasure; he will regard trouble as quite natural.

629. He who does seek for pleasure in pleasure will not be vexed in sorrow.

630. One who regards trouble as pleasure will gain the elevation which his enemies desire (for themselves).

அங்கவியல்
அதிகாரம் 64—அமைச்சு

631. கருவியும் காலமும் செய்கையும் செய்யும்
அருவினையும் மாண்ட(து) அமைச்சு.

632. வன்கண் குடிகாத்தல் கற்றறிதல் ஆள்வினையோ(டு)
ஐந்துடன் மாண்ட(து) அமைச்சு.

633. பிரித்தலும் பேணிக் கொளலும் பிரிந்தார்ப்
பொருத்தலும் வல்ல(து) அமைச்சு.

634. தெரிதலும் தேர்ந்து செயலும் ஒருதலையாச்
சொல்லலும் வல்ல(து) அமைச்சு.

635. அறனறிந்(து) ஆன்றமைந்த

சொல்லான்எஞ் ஞான்றும்
திறனறிந்தான் தேர்ச்சித் துணை.

636. மதிநுட்பம் நூலோ(டு) உடையார்க்(கு) அதிநுட்பம்
யாவுள முன்நிற் பவை.

637. செயற்கை யறிந்தக் கடைத்தும் உலகத்
தியற்கை யறிந்து செயல்.

638. அறிகொன்(று) அறியான் எனினும் உறுதி
உழையிருந்தான் கூறல் கடன்.

639. பழுதெண்ணும் மந்திரியின் பக்கத்துள்
தெவ்வோர்
எழுபது கோடி உறும்.

640. முறைப்படச் சூழ்ந்தும் முடிவிலவே செய்வர்;
திறப்பா(டு) இலாஅ தவர்.

## SECTION II. LIMBS OF THE STATE

### CHAPTER 64—ON MINISTERS

631. He is the minister who finds out the means, the time, the deed and its full accomplishment.

632. A minister should have five qualities; tenacity of purpose, birth in a respectable family, welfare of the people, profound learning and perseverance.

633. A minister must be able to separate a foe from his ally, befriend allies and reunite separated allies.

634. A minister should study the consequences of

an act and carry it successfully by a decisive speech.

635. He is a helpful counsellor who is righteous and considerate in his speech, and always knows how to act.

636. To a keen intellect combined with learning no difficulty stands in the way.

637. Even though you know the rules, act in conformity with the world opinion.

638. Though a king listens not to wise words it is the duty of the minister to speak firmly to him.

639. A treacherous minister by the king's side is

equal to seventy crores of enemies.

640. Ministers who have
no requisite ability will
leave a task unfinished
though well begun.



அதிகாரம் 65—சொல்வன்மை

641. நாநலம் என்னும் நலன்உடைமை; அந்நலம்
யாநலத்(து) உள்ளதூஉம் அன்று.

642. ஆக்கமும் கேடும் அதனால் வருதலால்
காத்தோம்பல் சொல்லின்கண் சோர்வு.

643. கேட்டார்ப் பிணிக்கும் தகையவாய்க்

கேளாரும்
வேட்ப மொழிவதாஞ் சொல்.

644. திறனறிந்து சொல்லுக சொல்லை ; அறனும்
பொருளும் அதனின்ஊங்(கு) இல்.

645. சொல்லுக சொல்லைப் பிறிதோர்சொல்
அச்சொல்லை
வெல்லும்சொல் இன்மை யறிந்து.
646. வேட்பத்தாம் சொல்லிப் பிறர்சொல்
பயன்கோடல்
மாட்சியின் மாசற்றார் கோள்.

647. சொலல்வல்லன் சோர்விலன் அஞ்சான்
அவனை
இகல்வெல்லல் யார்க்கும் அரிது.

648. விரைந்து தொழில் கேட்கும் ஞாலம்
சொல்லுதல் வல்லார்ப் பெறின்.

நிரந்தினிது

649. பல்சொல்லக் காமுறுவர் மன்றமா சற்ற

சிலசொல்லல் தேற்றா தவர்.

650. இணர்ஊழ்த்தும் நாறா மலரனையர் கற்ற(து)
உணர விரித்துரையா தார்.



## CHAPTER 65—ON GOOD SPEECH

641. The virtue of good speech is greater than all the other good qualities found in one.

642. As both prosperity and ruin are

caused by words, a minister must guard against imperfection in his speech.

643. The 'minister must use such words as have the effect of strengthening the approval of those who agree and differ.

644. Speak having regard to one's capacity to listen; for there is no greater virtue nor wealth than that.

645. Speak out what you have to say only after knowing that your own argument will not be turned against you.

646. A good minister wins the approval of the listener by persuasive speech.

647. A clever speaker is neither tired nor fearful; none can defeat him in a debate.

648. Cogent reasoning and soft speech can bring the people over to one's side.

649. Those who cannot say a few words correctly will evince a desire to speak much.

650. Those who cannot explain well what they have learnt resemble the odourless flowers with their petals open.



அதிகாரம் 66—வினைத்தூய்மை

651. துணைநலம் ஆக்கம் தரூஉம்: வினைநலம்
வேண்டிய வெல்லாந் தரும்.

652. என்றும் ஒருவுதல் வேண்டும் புகழொடு
நன்றி பயவா வினை.

653. ஓஒதல் வேண்டும் ஒளிமாழ்கும் செய்வினை
ஆஅதும் என்னும் அவர்.

654. இடுக்கண் படினும் இளிவந்த செய்யார்
நடுக்கற்ற காட்சி யவர்.

655. எற்றென்(று) இரங்குவ செய்யற்க ; செய்வானேன்
மற்றன்ன செய்யாமை நன்று.

656. ஈன்றாள் பசி காண்பான் ஆயினும் செய்யற்க
சான்றோர் பழிக்கும் வினை.

657. பழிமலைந் தெய்திய ஆக்கத்தின் சான்றோர்
கழிநல் குரவே தலை.

658. கடிந்த கடிந்தொரார் செய்தார்க்(கு) அவைதாம்
முடிந்தாலும் பீழை தரும்.

659. அழக்கொண்ட வெல்லாம் அழப்போம் ; இழப்பினும்
பிற்பயக்கும் நற்பா லவை.

660. சலத்தாற் பொருள்செய்(து) ஏமார்த்தல் பசுமண்
கலத்துள்நீர் பெய்திரீஇ யற்று.

## CHAPTER 66—ON PURITY IN ACTION

651. A man's friends bring prosperity to him;
but his good acts fetch him his wish.

652. That deed must always be discarded which
does not promote virtue and produce fame.

653. Those who wish to become great must
always avoid deeds which darken the lustre of their
reputation.

654. Even adversity does not prompt men of un-
swerving purity to do mean things.

655. Desist from deeds which you may regret later;

but if you once happen to do such a deed, repeat it not.

656. Though you find your mother starving, do not do anything which will be condemned by the great.

657. Better the poverty adopted by the great than the wealth resulting from sin.

658. Those who do knowingly forbidden things will suffer in the end, although they may succeed in doing them.

659. What is secured by causing tears to others will be lost with tears. But good deeds will result in good later.

660. A minister who promotes his king's resources by fraud is like one who tries to store up water in a pot of unburnt clay.



அதிகாரம் 6

7—வினைத்திட்பம்

661. வினைத்திட்பம் என்ப(து), ஒருவன் மனத்திட்பம்
மற்றைய எல்லாம் பிற.

662. ஊறொரால் உற்றபின் ஒல்காமை இவ்விரண்டின்
ஆறென்பர் ஆய்ந்தவர் கோள்.

663. கடைக்கொட்கச் செய்தக்க(து) ஆண்மை இடைக்கொட்
எற்றா விழுமம் தரும்.
[கின்

664. சொல்லுதல் யார்க்கும் எளிது; அரியவாம்
சொல்லிய வண்ணஞ் செயல்.

665. வினைத்திட்பம் மாண்டார் வினைத்திட்பம் வேந்தன்கண்
ஊறெய்தி உள்ளப் படும்.

666. எண்ணிய எண்ணியாங்(கு) எய்துப எண்ணியார்
திண்ணியர் ஆகப் பெறின்.

667. உருவுகண்டு எள்ளாமை வேண்டும்: உருள்பெருந்தேர்க்கு
அச்சாணி அன்னார் உடைத்து.

668. கலங்காது கண்ட வினைக்கண் துளங்காது
தூக்கங் கடிந்து செயல்.

669. துன்பம் உறவரினும் செய்க, துணிவாற்றி
இன்பம் பயக்கும் வினை.

670. எனைத்திட்பம் எய்தியக் கண்ணும் வினைத்திட்பம்
வேண்டாரை வேண்டா(து) உலகு.

## CHAPTER 67—ON RESOLUTENESS

661. Determination in action is one's resolution. All others are nothing.

662. Ministers versed in lore will not do unprofit- able deeds, and if they do, they will not regret it.

663. A clever minister publishes a deed after its completion; if it becomes public in the intermediate stage, it will end in trouble.

664. It is easy for one to say, but it is difficult to do it in the said manner.

665. The resolution of a thoughtful

and good minister in strengthening his monarch will earn all praise.

666. Firm of purpose, ministers carry out their resolution.

667. Do not despise one for lack of personality. Does not the little nail of the chariot keep the wheel going ?

668. What you have clearly decided to do, do it without hesitation and delay.

669. Be resolute in deed which ends in happiness, though troublesome at the beginning.

670. The world will not esteem him who has no determined will, notwithstanding his other strong virtues.

## அதிகாரம் 68—வினைசெயல் வகை

671. சூழ்ச்சி முடிவு துணிவெய்தல் அத்துணிவு

தாழ்ச்சியுள் தங்குதல் தீது.

672. தூங்குக தூங்கிச் செயற்பால : தூங்கற்க

தூங்காது செய்யும் வினை.

673. ஒல்லும்வாய் எல்லாம் வினைநன்றே ; ஒல்லாக்கால்

செல்லும்வாய் நோக்கிச் செயல்.

674. வினைபகை யென்றிரண்டின் எச்சம் நினையுங்கால்

தீயெச்சம் போலத் தெறும்.

675. பொருள்கருவி காலம் வினையிடனொடு ஐந்தும்

இருள்தீர எண்ணிச் செயல்.

676. முடிவும் இடையூறும் முற்றியாங்(கு)
எய்தும்
படுபயனும் பார்த்துச் செயல்.

677. செய்வினை செய்வான் செயல் முறை
அவ்வினை உள்ளறிவான் உள்ளங் கொளல்.

678. வினையான் வினையாக்கிக் கோடல்
நனைகவுள்
யானையால் யானையாத் தற்று.

679. நட்டார்க்கு நல்ல செயலின் விரைந்ததே
ஒட்டாரை யொட்டிக் கொளல்.

680. உறைசிறியார் உள்நடுங்கல் அஞ்சிக்
குறைபெறின்
கொள்வர் பெரியார்ப் பணிந்து.

## CHAPTER 68—ON THE MEANS OF ACTION

671. Decision is the result of deliberation. It is harmful to rest it low.

672. Delay such things as call for delay. But
never delay that which cannot be delayed.

673. Achieve a thing wherever possible; if it were
not possible adopt a cautious policy.

674. An unfinished deed and an unfinished fight
will like a half extinguished fire, cause ultimate harm.

675. Do a thing after carefully deliberating on
five things: resources, means, the time, the nature of
the deed, and the place.

676. In doing a thing, weigh deeply your aim,
the hindrances and the final gain thereof.

677. The manner in which a thing should be done
is
to be determined after consulting an expert.

678.

Use one act to aehieve another just as one
wild elephant is used to capture another.

679. It is much more urgent to
secure the alliance
of one's enemies,
than to do good to one's friends.

680. Fearing
that their weak king may quake
with fear, ministers will bow before
superior kings and
accept their terms.



அதிகாரம் 69—தூது

681. அன்புடைமை ஆன்ற குடிப்பிறத்தல் வேந்தவாம்
பண்புடைமை தூதுரைப்பான் பண்பு.

682. அன்பறிவு ஆராய்ந்த சொல்வன்மை தூதுரைப்பார்க்கு
இன்றி யமையாத மூன்று.

683. நூலாருள் நூல்வல்லன் ஆகுதல் வேலாருள்
வென்றி வினையுரைப்பான் பண்பு.

684. அறிவுருவு ஆராய்ந்த கல்வி இம் மூன்றன்

செறிவுடையான் செல்க வினைக்கு.

685. தொகச் சொல்லித் தூவாத நீக்கி
நகச்சொல்லி
நன்றி பயப்பதாம் தூது.

686. கற்றுக்கண் அஞ்சான் செலச்சொல்லிக்
காலத்தால்
தக்க(து) அறிவதாம் தூது.

687. கடனறிந்து காலங்கருதி இடனறிந்(து)
எண்ணி உரைப்பான் தலை.

688. தூய்மை துணைமை துணிவுடைமை
இம்மூன்றின்
வாய்மை வழியு ரைப்பான் பண்பு.

689. விடுமாற்றம் வேந்தர்க்(கு) உரைப்பான்

வடுமாற்றம்
வாய்சோரா வன்க ணவன்.

690. இறுதி பயப்பினும்

எஞ்சா(து) இறைவற்(கு)
உறுதி பயப்பதாம் தூது.



## CHAPTER 69—ON EMBASSY

681. The characteristics of an ambassador are
loveability, noble birth and other qualities which evoke
the monarch's respect.

682. Love, wisdom, ability to talk with full
knowledge, are the three indispensable qualities of an

ambassador.

683. A skilful ambassador who wishes to gain his mission among other monarchs wielding the spear
must be more learned than the learned.

684. Only those who have wisdom, personality
and mature scholarship must be sent on a mission.

685. A good ambassador is he who can talk
cogently and sweetly and who is not offensive even in
saying things that are disagreeable.

686. The envoy must be learned, fearless, per-
suasive and expedient.

687. The best envoy states his case convincingly

knowing his duty at the proper time
and place.

688. The qualifications of a true
envoy are moral-
ity, loyalty to his monarch and
courage.

689. He who does not falter
even when faced
with personal danger is fit to deliver his
king's message.

690. A true envoy
the risk of death.
delivers his message even at



அதிகாரம் 70—மன்னரைச்
சேர்ந்தொழுகல்

691. அகலா(து) அணுகாது தீக்காய்வார் போல்க
இகல்வேந்தர்ச் சேர்ந்தொழுகு வார்.

692. மன்னர் விழைப விழையாமை மன்னரான்
மன்னிய ஆக்கந் தரும்.

693. போற்றின் அரியவை போற்றல்; கடுத்தபின்
தேற்றுதல் யார்க்கும் அரிது.

694. செவிச்சொல்லும் சேர்ந்த நகையும்
அவித்தொழுகல்
ஆன்ற பெரியார் அகத்து.

695. எப்பொருளும் ஓரார் தொடரார்மற்(று)
அப்பொருளை
விட்டக்கால் கேட்க மறை.

696. குறிப்பறிந்து காலங் கருதி வெறுப்பில
வேண்டுப வேட்பச் சொலல்.

697. வேட்பன சொல்லி வினையில எஞ்ஞான்றும்
கேட்பினுஞ் சொல்லா விடல்.

698. இளையர் இனமுறையர் என்றிகழார் நின்ற
ஒளியோடு ஒழுகப் படும்.

699. கொளப்பட்டேம் என்றெண்ணிக் கொள்ளாத

செய்யார்
துளக்கற்ற காட்சி யவர்.

700. பழையம் எனக்கருதிப் பண்பல்ல செய்யும்
கெழுதகைமை கேடு தரும்.



## CHAPTER 70—ON CO-OPERATION WITH KING

691. Those who personally serve the monarch do not go too near him or too far away from him, like those who warm themselves by the fire side.

692. Not to covet those things which are desired by the monarch produce lasting wealth.

693. To save himself a minister must avoid gross faults, for it is difficult to

please, once being found fault with.

694. In the presence of the great avoid whispering and smiling.

695. Let not the minister lend ear to the king's secret or be inquisitive to know it. But let him listen
to it when the king reveals it.

696. Watch the mood of the monarch. Talk to
him pleasantly and inoffensively.

697. Speak desirable things though unasked, but
abstain from profitless talk although solicited by him.

698. Do not disrespect a king on

the ground of

age or kinship, but behave as befits his royalty.

699. Men of high intelligence, respected by a king will not indulge in things revolting to him.

700. To take liberty under the cover of old acquaintance and do unwanted things is to court ill.



அதிகாரம் 71—குறிப்பறிதல்

701. கூறாமை நோக்கிக் குறிப்பறிவான்
எஞ்ஞான்றும்
மாறாநீர் வையக்(கு) அணி.

702. ஐயப் படாஅது அகத்தது உணர்வானைத்
தெய்வத்தோ(டு) ஒப்பக் கொளல்.

703. குறிப்பின் குறிப்புணர் வாரை உறுப்பினுள்
யாது கொடுத்தும் கொளல்.

704. குறித்தது கூறாமைக் கொள்வாரோ(டு) ஏனை
உறுப்போர் அனையரால் வேறு.

705. குறிப்பின் குறிப்புணரா வாயின் உறுப்பினுள்
என்ன பயத்தவோ கண்.

706. அடுத்தது காட்டும் பளிங்குபோல் நெஞ்சம்
கடுத்தது காட்டும் முகம்.

707. முகத்தின் முதுக்குறைந்த(து) உண்டோ உவப்பினும்
காயினும் தான்முந் துறும்.

